பிரசுரம் மாலை. | உ குமாரகுருபரன் துணை. | மணி 3.

# யாக்ஞவல்கியம்.

ஓர்

## தத்துவ விளக்கச் சாதுரியக் கதை.

இஃது


மதுரை

தமிழ்ச் சங்கத்தின் அங்கத்தினரும், சௌராஷ்டிர ஹைஸ்கூல்

தலைமைத் தமிழ்ப் பண்டிதரும், ஆங்கில கலாசாலைத் தமிழ்ப்

பண்டிதர் சங்கத்து அமைச்சரும், அற்புதக் கணையாழி,

நீதி சாரத்திரட்டு முதலிய நூலாசிரியரும்;

பாண்டிய நேசன் பத்திராதிபரும்

ஆகிய

திருத்தகு. பு. சிதம்பர புன்னைவனநாத முதலியார் அவர்களால்


இயற்றப்பெற்று


மதுரை

புத்தக ஷாப். P, N. சிதம்பர முதலியார் கம்பெனியாரால்.

மதுரை ஸ்ரீமீனாக்ஷி விலாஸம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

முதல் பதிப்பு. காலயுக்தி 1919.




[விலையணா 9.

# பாயிரம்.

இந் நூற்குப்பாயிரம் ஒன்று எழுதி உதவும்படி வேண்டிய பண்டிட் பி. சி. பி. நாதன் அவர்களின் சொல்லை மறுக்கத் துணியாது, வல்லவாறு ஒன்று எழுதத்துணிந்தனன். இந் நூலைப்பார்க்கலுற்றோர் யாவர், இதன் அருமை பெருமைகளையும், தத்துவ நாட்டங்களையும், இல்லறத்தின் சிறப்பையும்; சிறுவரும் எளிதில் உணர, எடுத்துக்காட்ட விரும்புகின்றனன்.

பூவுலகில் பொருந்தியுள்ள பல கண்டத்துள் நம் பரதகண்டம் ஒன்றே புண்ணிய பூமியென்றும், ஞானத்துக்கு உறையுள் ஆவதென்றும். புகழும் முன்னோர்பொன்மொழி முற்றிலும் பொருத்தமே. ஒவ்வொருவர் குணமும் தம்தம் கல்வியறிவுக்குத்தக்கவாறும், நல்லாரிணக்கத்துக்குற்றவாறுமே அமைகின்றதாகும். மனதின் சலன சுபாவத்தை ஆன்றோரும், புராணம் இதிகாசம், சாஸ்திரம் இவைகளைக் கொண்டு ஒழுங்குபடுத்தியுள்ளார்கள்.

பல முன்னூல்களை ஆராய்ச்சி செய்து பூர்விக ஆசாரத்தைக் கதாரூபமாய் விளக்கிக்காட்டும் இந்நூல், தற்கால நாகரிகத்தை முற்றிலும் தழுவியிருப்பதுமன்றி இந்நூலின் கருத்து, கல்வியறிவுக்கேற்றவாறே என்றும், தொழிலால் பேதமேயன்றி, ஜாதியால் பேதமின்று என்றும் வெளிப்படையாம். சிலர் கல்வியெனும் கருந்தனத்தை வயிற்றுப்பிழைப்புக்காகவே சிறிது காலம் சிறிது கற்று, பட்டம் முதலியன பெற்று விடுவதால் முற்றிலும் கற்றவராகக் கருதுகின்றனர். இக்கூற்று, பொருந்தாதெனல் 'கல்வி கரையில கற்பவர் நாள்

சில' கற்றது கைம்மண்ணளவு கல்லாதுலகளவு' என்ற வாக்கியங்களால் விளங்கும். கற்பவை கசடறக்கற்றவரே; கல்வியாலாய, அறம் பொருள் இன்பம் வீடு முதலிய நான்கு புருஷார்த்தங்களை அடையும் பேறுற்றவர். இக்கருத்தை மனதில் இருத்தியே, பிரமச்சரியத்தை அனுசரிக்கவேண்டுமென்றும், அப்பொழுது கற்கும் பலசாஸ்திரங்களும் பசுமரத்தாணி போல மனதில் பதியத்தக்கவையென்றும், மனமெனும் மங்கையைக் கல்வியெனும் கலையுடுத்தி, ஆன்மாவெனும் உத்தமபுருஷனுக்கு மணமபுணர்த்தவேண்டுமென்றும், அதனால் மேலான ஞானத்தை அடையலாம் என்றும் நல் அபிப்பிராயத்தைக்கொண்டு பல சாஸ்திரங்களையும் முறையே அமைத்துள்ளார். இதனை அறியாது மயங்கும் இக்காலத்து, முதுமொழியின் சகல பார்க்கங்களும், கல்விக்கு ஓர் எல்லையில்லாத மகத்துவமும், மைத்ரேயியின் சரிதையால் ஓர் பகுதி விளங்கும். அறிவையளிக்கும் வேதம் யாவருக்கும் பொது. அதன் ஆராய்ச்சியின் முதிர்ச்சியாலும், அதிதீவிரபக்குவத்தாலும், குருவின் அனுக்கிரகத்தாலும் ஒப்புயர்வற்ற மெய்யுணர்வு உண்டாம். பூர்விகத்தில் ஞானத்தை ஒவ்வொருவரும் அடையவேண்டுமென்றிருந்ததால் ஸ்திரீகளும் அவ்வழிகளில் முயன்று மேன்மையடைந்திருக்கிறார்கள் என்பது, சாஸ்திர ஆராய்ச்சியில் நன்கு புலப்படுகிறது. சுகம் துக்கம், நன்மை தீமை, லாபம் நஷ்டம், என இருவினைப்பலன் உலகில் இயற்கையாயிருப்பது போல, கல்வி சன்மார்க்கத்தையும் நல்ல சமயத்தையும் தரத்தக்கதாக இருக்கினும், ஞானம் அஞ்ஞானம் என்னும் இவ்விரண்டுக்கும் காரணமாகவிருக்கிறது. வழி செல்பவன், தீயவழியில் நழுவுவானாயின் வந்தவழி அறியாதவனாய், அப்பெருங் கொடிய துன்மார்க்கத்தில் உழல்வன். அஞ்ஞான அந்தகாரத்

க்குத் அடிமைப்பட்டவன் என்றும் சொல்லப்படுவன். ஞான த்துக்குச்சாதகமான நூல்களையே நன்கு கற்பதால் மகனைத்ஸ் வரியத்தைப் பெறலாம்.

இளம்பிராயத்தில், கண்டதே காட்சி கொண்டதே கோலம், என்று மாறுபடாமல் நம்நாட்டுச் சிறுவர்களுக்கு மட்டுமன்றி, சிறுமிகளுக்கும், பொய்யை மெய்யென்றறியும் புல்லறிவை நீக்கி; அன்பில் நெகிழ்ச்சியையும், பக்தியின் பரவசத்தையும் தரக்கூடிய பேரின்பத்தையளிக்கவல்ல இச்சிறுநூல்; 'போம் வழிவிட்டுத்திருப்பு' என்பது போல் இல்லத்திலேயேயிருந்து இன்புறும் மார்க்கத்தை, இனிய மொழிகளாலும் கலாவல்லவர்களின் செவிக்கினிய பாக்களை விரவியும், சுவை ததும்பச் சுந்தரமாய் எழுதப்பட்டிருக்கிறது. கற்கண்டைக் காட்டி நல்மருந்தை அன்னை தன் சேயருந்துவதுபோல், பெற்றோர் தம்பெண்மக்கள் மேன்பாடுடையராகவேண்டில், இந்நூலைக்கொடுப்பதே இலக்கியமாகும்.

தமிழ்க்கடல் திளைத்து அமுதெனப் பன்னூல மொழிபெயர்த்துதவும் பண்டிதரவர்கள் இயற்றியிருக்கும் இந்நூல்; ஆண் பெண் இருபாலருமே அறிவு, ஞானம் இவற்றைப் பெருக்கிக்கொள்வதற்குப் பெருந்துணையாக விளங்குகின்றதாதலின், சர்வகலாசங்கத்தார் இதனைத் தமிழ்ப்பாடப்புத்தகமாக ஏற்றவகுப்புக்குப் போற்றிவைத்தல் கடமையும் பெருமையுமாம்.

தமிழுலகோரும் இத்தகைய நூலைத் தந்தம் அகத்திற்கொண்டு ஆதரித்தல் ஆக்கியோருக்கு ஊக்கமளிக்கறபாலதென்பது என் துணிபு.

| மதராஸ் 28—6—19 | M. A. நெல்லையப்பர், பத்திராதிபர்: கதாரத்னகரம். |
|---|---|

குமரகுருபரன் துணை.

# நூன்முகம்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்.

'யாக்ஞ வல்கியம்' என்னும் பெயர்கொண்ட இந்நூல், வடமொழியினின்றும் வடநாட்டுத் தத்துவசிகாமணியொருவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட 'மைத்திரேயி' என்ற சிறு வேதாந்தக் கதையைத்தழுவி எழுதப்பட்டது. ஜனக மகாராஜாவின் வேதாந்தத் தோழரும், வைசம்பாயனரின் பிரதம சீடராயிருந்து பின் அவரினும் சிறக்க இரவியிடம் வாசநேயஸம்ஹிதையைக்கற்றுச் சுக்லயஜுர்வேதமியற்றியவரும் ஆன ஸ்ரீயாக்ஞவல்கியமுனிவர் தமது இருமனைவியர்க்கும் ஆன்மபோதத்தை உபதேசிப்பது இந்நூல் முதற்பாகத்திலும், இராஜ விசுவாசத்திலும், தேசத்தொண்டிலும் சிறந்த தளகர்த்தன் ஸ்ரீயக்ஞதத்தனின் செல்வி ஸ்ரீமதி கங்காபாய் சுயம்வரச்சிறப்பு, யாக்ஞவல்கியர் துறவு முதலியவை இரண்டாம் பாகத்திலும் பலநன்னூல் மேற்கோள்களுடன், மாணவர் உளங்கொள்ளுமுறையில் எழுதப்பட்டிருக்கின்றன.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்ற செந்நாப்போதார் திருவாக்குக் கிணங்க, மக்கள் யாவரும் பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருளைக்காண வேண்டும் என்பது ஒருதலை. ஆடவ

னைப்போற் பெண்டிரும் இருமைக்குமுரிய கலவி கேள்வி யாராய்ச்சியுடையவராயிருத்தல்வேண்டும்" என்பதும், இக்காலம் வலியுற்றிருக்கும் ஜாதிவித்தியாசம் முற்காலத்தில் விசேஷமாகப் பாராட்டப்படவில்லை என்பதும், இவ்வாழ்வியல்பும் பிறநற்குணங்களும் இந்நூலில் விரிவாய்க்காணப்படும்.

முதற்பாகத்திலுள்ள ஆன்மபோதப்பகுதி; அரிமழும் ஸ்ரீமத்சிவானந்த சுவாமியவர்களால் பார்வையிடப்பெற்றிருப்பதுடன், நானது ஜனவரிமீ மதுரைத் தமிழ்ச்சங்க [illegible] நூற்பரிசோதகரும், திருவாவடுதுறையாதீனவித்வானும் ஆகிய ஸ்ரீமத் சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்கள் தலைமையில் நடந்த அபிராமம் ஸ்ரீபாஸ்கரவித்பா சேதுதமிழ்ச்சங்க வருடோத்ஸவக் கூட்டத்திலும் அரங்கேற்றப் பெற்றுள்ளது.

லெட்சுமிராமம் கோவை மணிகளைப் பதிப்பித்து என்னை யுற்சாகப்படுத்தும் பி. நா. சி. ஏஜண்டு ஸ்ரீ மு. கிருஷ்ண பிள்ளை அவர்களுக்கும், இந்நூற்குப் பாயிரம் ஒன்றெழுதி யுதவிய எனதுரிமையன்பர் ஸ்ரீ M. A. நெல்லையப்பர் அவர்களுக்கும் எனது நன்றியுடன் கூடியவந்தனம் உரித்தாகின்றது.

கலாசாலை யதிகாரிகளும், கல்வியிலாகாத் தலைவரும் இந்நூலை யுற்றவகுப்புக்குப் பாடப்புத்தகமாக்கி என்னை ஆதரிக்குமாறு வேண்டிக்கொள்கின்றனன்.

நாதனிலாலயம்
19-7-19

தண்டமிழ்த் தொண்டன்,
P. C. P. நாதன்.

உ

குமரகுருபரன் துணை.

# யாக்ஞவல்கியம்

அல்லது

# ஆன்மபோத விளக்கம்.

## *Part I*

## முதலாவது அத்தியாயம்.

"தவளாத் தமிழ்மறைத் தாதார் கோயில்
அவளைப் போற்றும் அருந்தமிழ் குறித்தே"

நீர்வளமும் நிலவளமும் சீதோஷ்ணமும் நிறைந்து விளங்கும் நாட்டில்தான் நாகரிகமும் மனிதரின் நன்முயற்சியும் சிறந்து விளங்கும் என்பர் சரித்ராசிரியர். இற்றைக்கு முப்பது நாற்பது நூற்றாண்டுகட்கு முன்னரும் நாகரிகத்திற் சிறந்து விளங்கிய 'நாடுகள்; பழைய உலகம் என்றழைக்கப்படும் பகுதியிற் பொருந்தும் எகிப்து, பேபிலன், சீனம், இந்தியா என்ற நான்குமே.

இப்புண்ணிய பாரதகண்டத்தில் நாலாயிரம் ஆண்டுகட்கு முற்கொண்டு ஏற்பட்டுள்ள வேத இதிகாசங்களும், புராணங்களும்; காவியங்களும், இத்தேசத்தின் கல்வி மேம்பாட்டையும் அரச தருமத்தையும், குடிகளியல்பையும், தெய்வத்தியானம் • வழிபாடு முதலியவற்றையும் நன்கு விளக்குவனவாம். மற்ற நாட்டார் அடையாத வேதாத்தியயனம், வேதப் பயிற்சி தத்துவவிசாரம் முதலியவை இந்

நாட்டில் ஏற்பட்டிருப்பதும், இராஜாங்க முறை தர்மத்
தீர்வு முதலியவற்றை விளக்கும் சாஸனங்கள் கல்லிலும்
செம்பிலும் பத்திரத்திலும் ஏற்பட்டு இலங்குவதும், இந்தி
யாவின் நாகரிகப் பழமையைப் புலப்படுத்துவனவே.
எழுத்துக்கள் வடிவாக்கப்படாத காலத்தில் வேதம் முத
லிய கலைகளை நந்நாட்டினர் வாய்மொழியாகவே குருபரம்
பரையாகக் கேட்டுப் போற்றிச் சிந்தித்து ஒழுகுவராயினர்.
இருக்குவேதத்தில் இந்துக்கள் தாயகம் பஞ்சாப் எனப்
பட்டிருப்பினும், இதிகாச காலத்து, கங்காதீரமே இந்து
ராஜ்யபீடமாக விளங்குவதாயிற்று. இப்புண்ணிய நதியின்
பூர்வ பாகங்களில் இக்கண்டப் பெயர்க்காரணரான ஸ்ரீ பர
தன் உதித்த குருகுல மன்னர்களும், உத்தரபாகத்தில்
தேவர்துயர் போக்கி யுலகையின்புறுத்திய ஸ்ரீராமபிரான்
அவதரித்த சூரியகுல மன்னராதியரும் ஆண்டு பெருமை
பெற்றவர்கள். இவர்களைப்போன்று பெருமை பெற்ற
விதேக அரசர்கள் கண்டகி நதியைக் கடந்து கங்கைக்கு
வடபாகத்தில் அரசுபுரிந்து வந்தார்கள்.

இவ்விதேக மன்னரின் முன்னோரான ஸ்ரீமாதவ விதே
கன் என்பவன், பஞ்சாப்பிலுள்ள சரஸ்வதிதீரத்தினின்றும்
தனது குருவான கௌதமருடன் அநேக இடங்களைக்
கடந்தும் அக்கினிதேவனின் அநுமதிப்படி கண்டகி நதிக்
குக் கீழ்ப்பாகத்தில் வசிப்பனாயினன் எனப்படுகிறது. இப்
பிரதேசமே இன்றும் திரிகர்த் (Tirhut) என்றழைக்கப்படு
கிறது. காசிமன்னர்களின் முன்னோரும் இவ்விதமே மேற்
கிந்தியாவிலிருந்து தற்பொழுதைய காசிக்குவந்து ஆட்சி
புரிவாராயினர் என்பர்.

பஞ்சாப் பிரதேசத்தில் நாமதிக்க காலத்து அநுசரித்துவந்த தெய்வ வழிபாடு மதக்கொள்கைகள் முதலியன இப்பிரதேசங்களிற் குடியேறிய பின்னர் மாறுபாடடையவே, வேதமுதலியவும் புதுமுறையிற் பகுக்கப்படுவனவாயின. யக்ஞம் முதலிய சடங்குகளைச் செய்யும் குருமார்களும் தங்களைத் தனிவகுப்பாகக் கொள்வார்களானார்கள். கங்காதீர இந்துக்களின் அநுஷ்டானத்தில் இருக்கு, யசுர், சாமம் என்ற மூன்று பாகுபாடுகளே யிருந்தனவென்றும், குருபாஞ்சால யுத்தத்துக்கு முன்னர் தான் அதர்வவேதம் பிரித்து வகுக்கப்பட்டதென்றும் சொல்லப்படுகின்றன.

இவ்விதம் வேதக்கருத்துக்கள் குருமார்கள் இஷ்டப்படிக்குச் சொல்லப்பட்டும் அநுஷ்டிக்கப்பட்டும்வர ஆரம்பித்த நிலைமையைக்கண்ட இந்து அரசமேதாவிகள் வேதப்பொருளைத்தக்கவரைக்கொண்டு வரையறுத்து, ஒழுங்கு செய்யமுற்பட்டனர். அதாவது வேதத்திற் கூறப்பட்ட சடங்குகள் நிறைவேற்றப்படவும், வேதத்திற் சொல்லப்படும் ஆத்மபோத விஷயங்கள் நன்கு விவகரிக்கப்படவும் விரும்பினர். இங்ஙனம் குருமார்களின் அநுஷ்டானத்தைச்சீர்ப்படுத்தி வேத தத்துவங்களை விளக்க முயற்சித்த விதேகநாட்டு அரசர்கள், காசிமன்னர்கள் இவர்கள் நல்லாதரவாலேயே உபநிஷதம் வெளிப்படுவதாயிற்று.

உபநிஷதங்கள் செய்வதற்கான விஷயங்களை உபகரித்த காலமாகிய சுமார் 4000 வருடங்களுக்குமுன் நடந்ததாகச் சொல்லப்படும் மிக்கதையை வாசிப்பவர்கள் தங்களைப் பேகாரில் வசிப்பவர்களாகப் பாவித்துக்கொள்ள

வேண்டும். மிதிலாபுரியைச்சார்ந்த ஜனகபுரியின் கடை யெல்லையினின்றும் பார்ப்போமாகில், நகரத்திலும் நம்மைச் சுற்றிலும் நடக்கும் விசேஷங்களை யறியக்கூடியவர்களா வோம். கதாசிரியர்கள் சொல்கிறபடி, ஸ்ரீராமபிரானின் மாமனாரும், சீதாபிராட்டியின் தந்தையாரும், யாக்ஞவல்கிய முனிவரின் வேதாந்தத் தோழரும், பூர்வீகக் கலைகளின் களைகண் ஆனவருமான ராஜரிஷி யெனப்படும் ஜனகமகா ராஜன் நகரம்தான் இந்த ஜனகபுரியென்பது. வசந்த காலத்தோர் காலை, சுமார் 7 மணிக்கு, ஜனகபுரியின் புற வெல்லைப்பக்கமுள்ள குன்றுகள் அடர்ந்த பாழான மைதா னத்தில் நாம் உலாவச்செல்வதாக வைத்துக்கொள்வோம். தற்கால பேகார் மாகாணவாசிகளில் வித்தியாசமுள்ள நெட் டையும், நல்ல தேகக்கட்டும் பொருந்திய மூன்று யாத்திரி கள் அந்த மைதானவழியாய் நகரத்திற்கு மெதுவாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள்.

அவர்களில் இருவர் பூர்வீக ஆயுத சந்நத்தராய் ஒவ் வொருவரும் கையில் வில்லும், தோளில் அம்பறாத்தூணி யும், இடுப்பிற் செருகிய உறைவாளும், உடையவர்களா யிருந்தார்கள். மூன்றாவது மனிதரோ சுத்தமான சாதா ரண உடையாலும், அறிவிருப்பங்காட்டும் முகத்தின் பொலிவாலும், அந்தணக்கலைவலாளர் எனக்காணப்பட் டார். அருகாண்மையிலுள்ள ஊருக்கு ஏதோ அவசர காரியநிமித்தம் ஜனகமகாராஜாவினால் அனுப்பப்பட்ட பிர தம அந்தரங்க மந்திரியாகிய மித்திரமுனிவரே இவர். இவ ர்கள் மூவரும் மேற்படியூருக்குப்போய்க் காரியம் பார்த்து விட்டு ஜனகபுரிக்கு வந்துகொண்டிருக்கிறார்கள்

---

## இரண்டாவது அத்தியாயம்.

---

முதலில் மூவரும் சம்பாஷித்த விஷயத்தின் சிலபகுதியைக் கவனிப்போம்.

க்ஷத்திரியர்களில் ஒருவன் ரிஷியை விளித்துச்சொல்லுகிறான்; "கௌரவந்தங்கிய ஐய! வாராணஸி (Benares) யினின்றும் வந்ததுமுதல் தங்கள் முகத்தில் ஓர் அபூர்வமான ஏக்கத்தைக் கவனித்து வருபவனாகிறேன். இப்பொழுது நமது சம்பாஷணை சமயத்திலுங்கூடத் தங்கள் கவனம் வேறொன்றைப்பற்றி யிருப்பதாகவும் விளங்குகிறது. எங்களிடத்தில் தாங்கள் ஏக்கங்கொள்வதற்கான காரணத்தைத் தெரிவிக்கக்கூடாதா? காரணமறிய மிக்க ஆர்வத்துடன் காத்திருக்கிறேன்."

மித்திரர்:—யக்ஞதத்த! உனக்கும் விஷ்ணுமித்திரனுக்கும் மறைத்து வைக்கும் காரியம் ஒன்றுமில்லை. விஷ்ணுமித்திரனே மகாசபை முடிந்த மறுகாலே எனது ஏக்கத்தைக் கவனித்துக் காரணத்தைக்கேட்டனன். அவனிடத்தில் அதைப்பற்றிப் பின்னர் சொல்வதாகக்கூறியிருந்தேன். ஆனால் இதுவரை சந்தர்ப்பம் வாய்க்காமற்போயிற்று இப்பொழுதோ நீவிர் இருவீரும் ஒருசேர இருப்பதால் கலக்கமின்றி எனது அபிப்பிராயத்தை வெளியிடத்துணிகின்றனன்.

யக்ஞதத்தன்:—தாங்கள் எந்த மகாசபையைக் குறித்துப் பேசுகிறீர்கள்? நான் ஊரில் இல்லாததால் அதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நான் காசிக்குப் பிரயாணப்பட்டபொழுது, ஜனகமன்னனில் ஒரு பெரிய யக்

ஞாதத்திற்கு ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன, அது விஷயமாக நடந்த கூட்டத்தைப்பற்றியா குறிப்பிடு கிறீர்கள்?

விஷ்ணுமித்திரன்:—நீ அப்பொழுது நகரில் இல்லாம லிருந்தது உனக்கு அதிக நஷ்டத்தை விளைத்துவிட்டது. அதைப்போன்ற பெரிய கூட்டம் ஒன்றை நான் நாளது வரை பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை.

யக்ஞதத்—அந்தச் சபையில் நம் வித்வான்கள் யாவ ரும் பேசினார்களோ?

விஷ்-மி.—பிரசித்தமானவர்கள் யாவரும் பேசினார்கள்

யக்ஞதத் —தர்க்கிக்கப்பட்ட விஷயம் யாது?

விஷ்-மி.—முன்னதாக யாதொரு விஷயமும் குறிக்கப் படவில்லை. வந்திருந்த புலவர்களெல்லாரும் வெவ்வேறு விஷயமான கேள்விகளைக்கேட்டார்கள். அவைகள் மாரிகா லத்து மழைப்பெருக்கைப் போன்றன. இவைகளுக்கு யாக்ஞவல்கிய முனிவர் பதிலளித்தபோது பலவேறு விஷ யங்களையும் எடுத்துச்சொல்லவேண்டியதாயிற்று. ஸ்ரீமதி கார்க்கியம்மை பிரமத்தின் சர்வ வியாபகத்தைப்பற்றியும், ஸ்ரீமத் உதலகமுனிவர் பிரமத்தின் அந்தர்யாமியத்தைப் பற்றியும், கேட்டார்கள். எனக்கு ஓய்வு ஏற்பட்டபொ ழுது அதனைவிரித்துரைக்கிறேன். அவர், தெய்வீகத்தன் மையைக் குறித்து. அன்று சபையில் எடுத்துரைத்தது போல் அவ்வளவு அழகாக இதுவரை ஒருபொழுதும் வெளியிட்டதில்லை.

யக்ஞதத்—அவரை மற்றவர்கள் எதிர்க்கக் காரண மென்ன?

வி. மி.—அவர் முதலில் நிதானமில்லாமல் நடந்து கொண்டதே எதிர்ப்புகளுக்குக் காரணம். என்றாலும் முடிவு நன்றாயிருந்தது. யாக்ஞவல்கியரின் படிப்பும் பரமார்த்த ஞானமும், மறக்கப்படமுடியாத மகாசபையில் பிரகாசிக்க இதுதான் நல்ல சந்தர்ப்பமாயிருந்தது. முனிவர் முப்பது வயதுள்ள யௌவன புருடரே அவரது இளம்பருவத்திலேயே மனச்சக்தியின் விளக்கம் இவ்வளவென்றால் சரியானபருவத்தில் எவ்வளவு விசேஷமுடையதாகும்? இத்தகைய மேன்மையான சீஷருடன் ஸ்ரீமத் வைசம்பாயன முனிவர் இணங்கியிராது பகைமை பாராட்டிக்கொண்டது தான் விந்தையாயிருக்கிறது.

யக்ஞதத்.—அந்த விஷயம் யாக்ஞவல்கியரை எந்த விதத்திலும் கெடுத்துவிடாதென்றே நினைக்கிறேன். அதனால நமக்கும் யாதொரு கெடுதியுமில்லை. வைசம்பாயனர் போதித்த வேதத்தைக் கிருஷ்ணயஜுர் வேதம் என யாக்ஞவல்கியர் குறிப்பிட்டது சரியானதே. அவருடைய மாணாக்கர்கள் அந்தவேதத்தை ஓதும்பொழுது, சுலோகம் வியாக்யானம் யாவும் ஒருவிதமாகக் கலந்திருந்தமையால் அந்தவித்தை இருட்டறைக்குட்போவதை போன்றதாதலால் அதைக் கறுத்தவேதமென்று சொல்லலாம். யாக்ஞவல்கியர் இப்பொழுது தங்கள் உதவியால் தொகுத்துக் கொண்டிருக்கிற வேதத்திற்குச் சுக்ல (வெள்ளை) யஜுர் வேதமென்ற பெயர் பொருத்தமென்றே நம்புகின்றேன். என்றாலும் அதைப்பற்றி விரிவாக மற்றொரு காலத்திற் கேட்கக் கருதியுள்ளேன். இப்பொழுது விஸ்வாமித்திரன் சொல்கிறபடி, யாக்ஞவல்கியரிடத்தில் ஆச்சர்ச்சியான கேள்விகள் கேட்கப்பட்டதன் காரணத்தைத் தயை செய்து தெரிவிக்கவேண்டுகிறேன்.

மித்தி—அந்த மகாசபா மண்டபத்தருகில் அரசன் தங்கக்குப்பிகள் கட்டியுள்ள ஆயிரம் பசுக்களைக்கொண்டு வந்து நிறுத்தி, சபையோரைப் பார்த்து, அறிவுடைப் பெரியீர்! உங்களில் விசேஷ புத்திமான் இதோ நிறுத்தப் பட்டிருக்கும் பசுக்களைத்தன் வீட்டுக்கு ஓட்டிப்போகலா மென்று தெரிவித்தனன்.

யக்ஞதத்—என்ன! எவன் அடக்கமில்லாமல் தானே அதிக அறிவாளியென்று சொல்வான்?

மித்.—ஆகையால்தான், யாக்ஞவல்கியர் முதல்முதல் புத்திக்குறைவாய் நடந்துகொண்டார் என்கிறேன். பசுக்களின்மேல் அவருக்கிருந்த அதிக ஆசையே அவருக்குக் குறைவையுண்டுபண்ணக் காரணமாயிற்று. அவர், யாவரும் அமைதியாயிருப்பதையும், எவரும் பசுக்களை விரும்பாததையும் கண்ணுற்றுத் தமது சிஷன் ஒருவனிடத்தில் பசுக்களைத் தமது கிருகத்திற்கு ஓட்டிப்போகும்படியாகச் சொன்னார்.

யக். தத்.—ஆ! ஆ!! எவ்வளவு ஆச்சரியம்.!!!

மித்ர.—அவர் நடத்தை உண்மையாகவே யாவருக்கும் அதிசயமாகத் தோன்றியது. எல்லாரும் தத்தமக்குண்டான கோபத்தை வெளிக்காட்டாது அடக்கிக்கொண்டு ரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்தில் ஜனகமன்னரின் ஹோத்திர குருவாகிய ஸ்ரீமத் அஸ்வலா என்பவர் அதிகக்கோபங்கொண்டு யாக்ஞவல்கியரைப்பார்த்து "எங்களுக்குள் நீயே அதிக அறிவாளியென்று நினைக்கிறாயா" என்று கேட்டனர். அப்பொழுது யாக்ஞவல்கியர் எழுந்து, "ஆன்றோர்களே! அநேக [illegible]

மையான வர்த்தனம். எனக்கு உண்மையாகவே இந்தப் பசுக்களின்பேரில் விருப்பமாகையால், என்னிடத்தில் கேட்கும் சகல கேள்விகட்கும் சரியான பதில் அளித்து விடுவேனாயின் அவைகளை எனக்குக் கொடுத்துவிடுவதில் தங்களுக்கு யாதொரு ஆட்சேபணையும் இராதென்று நினைக்கிறேன். கேள்வி கேட்கப்படுவதில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சியே." என்று கூறினர். இதுதான் விஷ்ணுமித்ரன் சொல்கிறபடி கேள்விமேற்கேள்வி கேட்கக் காரணம். உனக்குச் சௌகரியப்பட்ட காலத்தில் எல்லா விபரத்தையும் அவனிடமிருந்து கேட்டுக்கொள்ளலாம்.

யக்-தத்.—சரி, அப்படியே தவறாது கேட்டுக்கொள்கிறேன். ஆனால் இப்பொழுது என்னுடைய பிரதான கேள்விக்கு மாத்திரம் விடையளிக்கவேண்டுகிறேன். மகாசபையைப்பற்றி விசாரித்தபொழுது கேட்கவேண்டியதைக் கேட்க மறந்துவிட்டேன். நாம் இப்பொழுது பேசிக்கொள்கிற சபைக்கும் தங்கள் ஏக்கத்திற்கும் காரணம் என்ன? மேற்படி சபைக்கும் அதற்கும் ஏற்பட்ட சம்பந்தம் யாது?

மித்.—எனது ஏக்கத்திற்குக் காரணம் எனது குமாரத்தியே. அவளுக்கு இப்பொழுது வயது 18. அவளைக் கலியாணஞ் செய்துகொடுக்க எனக்கு அதிக சந்தோஷம். ஆனால் நான் இது விஷயத்தில் தவறுசெய்துவிட்டேன்.

விஷ். மி.—தங்கள் தவறுதலின் தாத்பரியம் என்ன? தங்கள் புத்திரியைப்போன்ற அழகும் சிறப்பும்பொருந்திய [illegible]களைக் காண்பதரிது. மேலும் நமது ஸ்திரீகளில் [illegible]பான்மையோர் பெற்றிராத கல்வியைத் தாங்கள் தங்கள் மகளுக்கு அளித்துள்ளீர்கள். நான் எனது கலா

பர்களிடத்தில் சௌபாக்கியவதி மைத்திரேயி சீக்கிரத்தில் அவளுடைய சிறியதாயார் ஸ்ரீமதி கார்க்கியைப்போலவே ஒரு பண்டிதையும் பிரசங்கியும் ஆய்விடுவள் என்று அடிக்கடி சொல்லியுமுள்ளேன். இவ்வளவு சிறப்புள்ள பெண்ணுக்குக் கணவனைத் தேடுவது கடுமையான காரியமா? நமது நகரத்திலோ வாசித்துணர்ந்த வாலிபரோ மிகுதி.

மித்தி.—படிப்பும் ஒழுக்கமும் வாய்ந்த வாலிபர்களுக்குப் பஞ்சமில்லை. நீ இவ்வளவு தூரம் பாராட்டிப்பேசிய மைத்திரேயி கல்வியே அவளை இப்பொழுது மணஞ்செய்து கொடுப்பதற்கு இடையூறாக இருக்கிறது. ஆகையினால் நான் பெருந்தவறு செய்துவிட்டேன் என்றேன்.

யக்-தத் —அஃது எப்படி?

மித்—யாக்ஞவல்கியர், வைசம்பாயனரைப் பிரிந்தது முதற்கொண்டு ஒரு பெரிய யஜுர் வேதத்தைத் தொகுப்பதில் என்னுடன் பெரிதும் உழைத்து வருகிறார். தொகுப்புக்கு உதவி செய்பவர்கள் சிலர் பிரதிதினமும் எனது வீட்டிற் கூடுகிறார்கள். இக்கூட்டங்களில் பிராமண தருமத்துக் கேற்றவிதம், முக்கியமான வேலையைக்கூடச்செய்யாது பரமார்த்தவிஷயங்களையே தர்க்கிப்போம். இவ்விததர்க்கங்கள் எங்களுக்கு மிக்க மகிழ்ச்சியையும் தெளிவையும் கொடுப்பதோடு அவைகளை ஆழ்ந்து சிந்திக்கும்பொழுது எங்கள் ஊண் உறக்கத்தையுங்கூட மறக்கடிக்கின்றன. இவ்வித தர்க்கசபையில் அடிக்கடி ஸ்ரீமதி கார்க்கியும் வந்திருப்பள். எனது புத்திரி என் மைத்துனியிடத்தில் அதிகப்பற்றுடையவளாதலால், அவள் சிறிய தாயாராகிய கார்க்கியம்மாள் செல்லுமிடமெல்லாம் தடையில்லாமல் இவளும் போவாள்.

தேசத்தின் பலபகுதிகளினின்றும் வந்திருந்த வித்வான்கள் நிரம்பிய அந்த மகாசபைக்கும் ஸ்ரீமதி கார்க்கியுடன் போயிருந்தாள். சபை மத்தியில் அமைக்கப்பட்டிருந்த பிரசங்கமேடையில் மற்ற வித்வான்களுடன் கார்க்கியும வீற்றிருந்தனள். இவ்விடத்தில் கார்க்கியினருகிலிருக்க வசதியில்லாமையால், நமது மைத்திரேயி சதசின் வலதுபக்கத்தில் வீற்றிருந்த சீமாட்டிகளுடன் தங்கியிருந்தாள். என்றாலும், எனது மகள் விஷயமாக நான் சொல்லவேண்டியதென்னவென்றால், நாங்கள் தர்க்கித்த விஷயத்தில் மைத்திரேயி ஏதாவது அறிந்துகொண்டாளோ என்பதுதான். ஆனால் இப்பொழுதோ அவள் அநேகமாய் நாள் முழுமையையும் இந்தவிஷயங்களைப்பற்றி யோசிப்பதிலும் பேசுவதிலுமே கழித்து வருகிறாள். இதுதான் அவள் மணத்திற்குத் தடையாயிருக்கிறது.

விஷ். மி.—தாங்கள் விவகரிக்கிறவிதம் தங்கள் குமாரத்தியிருப்பாளன்றி வேறு எவ்விதம் இருக்கக்கூடும். பதினெட்டுவயதில் அவள் ஒரு வேதாப்பியாஸியானதில் ஆச்சரியம் ஒன்றுமில்லையே. எனது தீர்க்கதரிசனம் நிறைவேறுவதைப் பார்க்கிறேன். இதனால் மைத்திரேயி தனது சிற்றன்னையைப்போலக் கன்னியாக இருக்க விரும்புகிறாளென்று நினைக்கிறீர்களோ?

மித்—அநேகமாய் அப்படியே. "தாங்கள் என்னை யாக்ஞவல்கியருக்கு மணஞ்செய்து கொடுப்பீர்களாயின் மணம் புரிந்துகொள்வேன். இல்லையேல், சிறியதாயாரைப் போல 'நிர்மமத்வ விரதம்' எடுத்துக்கொள்வேன்" என்றே சொல்லுகிறாள். அந்தமகா சபையின் பின்னர் இந்த

எண்ணமே அவளது முழுமனதையும் கவர்ந்துள்ளது. ஆகையால் இப்பொழுது அந்த வித்வக்கூட்டம் எனக்கு ஏக்கத்தை எவ்விதம் உண்டுபண்ணியிருக்கிறதென்பதை அறிந்துகொள்.

யக். தத்—தெரிந்துகொண்டேன். ஆனால் தங்களுக்கு வருத்தமேற்படக் காரணம் தெரியவில்லை. ஏனென்றால் யாக்ஞவல்கியருக்குத் தங்கள் குமாரத்தியை மணந்து கொள்ள மிக்க விருப்பமிருக்குமென்று எனக்குத்தோன்றுகிறது.

மித்—யாக்ஞவல்கியரின் குடும்பவாழ்க்கையைத் தெரியாத காரணத்தினாலேயே நீ அப்படிச் சொல்கிறாய். ஒருவேளை அவருக்குக் கலியாணமாயிருக்கிறதென்று மட்டும் நீ உணர்ந்திருக்கலாம். அவர் எனதருமைத் தோழராகிய ஸ்ரீமத் காத்தியாவின் மகளையே மணமுடித்துள்ளார். இக் காத்தியாயனியோ, "மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" என்ற வள்ளுவர் வாசகத்துக்கிணங்க அநேகமாய்ச் சகலவிதத்திலும் யாக்ஞவல்கியரின் சிறந்த துணையாகவே விளங்குகிறாள். இவள் அதிக அழகும் நற்குண நற்செய்கையும் குடும்பபாதுகாப்பில் தேர்ச்சியும் வாய்ந்தவள். "முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம் இன்சொலினதே அறம்" "மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" என்ற பொய்யாமொழிக் கேற்பத்தன் வீடுதக்கு வருபவர்களை இன்சொற் கூறி உபசரித்துச் சிறப்பிக்கும் பெருங்குணமும் பொருந்தியவள். நான் யாக்ஞவல்கியரின் வீட்டிற்குப் போனபொழுதெல்

லாம் மனங்குளிர்ந்த மரியாதையுடனும், விநயத்துடனும், முகமலர்ந்த நகையுடனும் இன்சொல்லால் உபசரித்ததை நோக்க அவளைத் தெய்வீகப் பிறப்பென்றே கருதவேண்டியவனாகிறேன். யாக்ஞவல்கியரும் இவ்வுத்தமியிடத்தில் அதிகப்பற்றுடையவராகவே காணப்படுகிறார். இரண்டாவதாக விவாகம் செய்துகொள்ள அவருக்குப் பிரியமேற்படினும், இவ்விதசுகமான குடும்ப வாழ்க்கையைக் கெடுக்க எனக்கு மனமில்லை. முக்கியமாய், எனது குமாரத்தி சிறு பெண்ணாகவும் அநுபவமற்றவளாகவுமிருப்பதால், அவ்வளவு புத்திசாலித்தனமாய் நடந்துகொள்வாள் என்றும் நிச்சயங்கூறவும் முடியவில்லை.

விஷ். மித்.—முனிபுங்கவ! ஸ்ரீமதி காத்தியாயனியைப் பற்றி விவகரிக்கும்பொழுது அநேகமாய் என்ற பதத்தைப் பிரயோகித்தீர்களே அச்சொல்லின் பொருள் யாது என்பதைஎளியேனுக்குவிளக்கியருளக்கிருபைசெய்யவேண்டும்.

மித்ர.— (சிரித்துக்கொண்டு) நமது யுவ முனிவரின் மனைவியாகிய காத்தியாயனி அநேகமாய்ச் சகலவிதத்திலும் சிறந்தவளென்றதாவது, மற்ற வகைகளில் அதிகத் தேர்ச்சி பெற்றவளாயினும், வேதாந்த விஷயங்களில் பிரியமற்றவள் என்பதைக் குறித்தே. அவள் எப்பொழுதும் குடும்பக்காரியாதிகளைப் பார்ப்பதிலும், குழந்தைகளைப் பராமரிப்பதிலுமே சுறுசுறுப்புடையவள். எனது மகள் அல்லது மைத்துனியைப் போல அவளுக்கு ஆராய்ச்சி அறிவுகிடையாது.

யக்ஞ.— அப்படியானால், யாக்ஞவல்கியர் தமது வீட்டில் நமது மைத்திரேயியை எடுத்துக்கொள்ள இடமுண்டு

என்று கருதுகிறேன். காத்தியாயனியால் பூர்த்தி செய்யப் படாத ஆநந்தப்பகுதியை நமது மைத்திரேயி பூர்த்திசெய் யக்கூடும்.

மித்ர—அந்தப் பகுதி பூர்த்தி செய்யப்படவேண்டுவ தும், வேண்டாததும், யாக்ஞவல்கியரின் கவனத்தைப் பொறுத்தவை. மற்றவர்க்கு அதைப்பற்றிக் கவலை என்ன?

கடைசி வாக்கியத்தைச் சொல்லிக்கொண்டிருந்த பொழுதுங்கூட மித்திரர் ஏதோ ஓர் திக்கை நோக்கித் திகைத்து நின்றார். இதுவரை இம்மூன்று பிரயாணிக ளும் குன்றுகள் மத்தியில் மரமடர்ந்த ஒடுங்கிய பாதைக்கு வந்து சேர்வாராயினர். இன்னும் சிலநேரம் மித்திரர் பேச் சுப் பேசிக்கொண்டே சுற்றிலும் அழகான மரங்கள் நெருங் கிய ஒரு குன்றின் உச்சியில் தனிமையான ஓர் உருவத்தைக் கவனித்தார். அந்த உருவத்தைக் கவனித்ததில், ஓர் புரு டன் ஆழ்ந்த யோஜனையில் அதாவது நிட்டையில் இருப்ப தாகக்கண்டு, யார் என அறிய முயற்சித்தார். குன்றின் மேலிருந்த புருடர் யாக்ஞவல்கியரென்றே தெளிந்ததும், அவர் அக்கணம் நிவர்த்தி செய்யப்படவேண்டிய அபாயத் திலிருப்பதையும் கவனித்ததுமே; மித்திரரின் போக்கைத் தடைப்படுத்தின.

ப்பிரவிர்த்தியினின்றும் புலன்களை ஒடுக்கி வீற் றிருந்த முனிவருக்கு, ஒரு பெரும் புலி தம்மைக் குறி வைத்து மெதுவாகச் சத்தமின்றி அடுத்துவருகிற செய்தி விளங்கவில்லை. ஆனால் மித்திரரோ இந்த அபாய நிலையினை உடனே யச்ஞதத்தன் விஷ்ணுமித்திரன் ஆகிய இரு புத் திரர்களுக்குங் காட்டினார். அச்சமயமே இவ்விருவருந்

தனித்தனியே அம்பெடுத்து, புலியை நோக்கி எய்தார்கள். வரிசிலை குழைய வாங்கி விட்ட அம்புகள், புலியின் கால்களில் ஊடுருவிப் பாய்ந்துவிடவே அது, மேற்செல்லமுடியவில்லை. அவர்கள் அதன் மார்பை நோக்கி மீண்டும் இரண்டு அம்புகளைத் தொடுத்தார்கள். தொடுத்த அம்புபட்டதும் வீழ்ந்த பிராணியின் பக்கம் வந்து தங்கள் வாள்களால் அதனை இருதுண்டாக வெட்டி வீழ்த்தினார்கள். அது உயிர் விடும்பொழுது அலறிய சப்தம் முனிவரின் ஓர்மையைக் கெடுத்து அவரை விழிக்கச்செய்தது. ஞான திருஷ்டியால் நடந்த விஷயங்களை உணர்ந்து, அதிக நன்றியறிதலுடன் விருத்த மித்திரரின் பாதபத்மங்களைத் தொட்டு நமஸ்கரித்தும், இருவீரர்களைத் தழுவியும் மகிழ்ந்தனர். அடிக்கடி அவர்கள் தமக்கு வரவிருந்த விபத்தை விலக்கியமையைப் பாராட்டி வந்தனங் கூறினார். இத்தகைய இடத்தில் மேலும் தாமதித்திருத்தல் நன்றல்லவென நால்வருங்கருதி, வெகு விரைவாக நகரத்திலுள்ள தத்தம் வீடுதிகளுக்குப் புறப்பட்டு க்ஷேமமாய் வீடு அடைந்தனர்.



## மூன்றாவது அத்தியாயம்.

இரண்டாவது அத்தியாயத்தின் இறுதியிற் கூறப்பட்ட சம்பவம் மித்திர முனிவரின் எண்ணம் பூர்த்தியாவதற்கு நேர் சாதகமாயிருக்கவில்லை. அவர் கீழ்மைக் குணங்களுடையவரா யிருப்பாரானால், யாக்ஞவல்கியரின் உயிரைப்பாதுகாத்தமைக் கீடாகத் தமது மகளை மணம்புரிந்து கொள்ளவேண்டுமென்று பிரஸ்தாபித்திருப்பார். பூர்வ காலத்துத் தேச சமூகாசாரப்படி விவாகமாயிருக்கிற ஒரு

வருக்கு, அழகும் அறிவும் மிக்க பெண்ணை மணக்துகொடுப்பதில் முறைக்கேடுமில்லை. அப்படிப்பட்ட மணத்திற்கு அவரும் பிரியப்படுவார். இது சாதாரண மனிதர்களின் வழக்கம். முதல் அத்தியாயத்தை வாசித்தவர் மித்திரரும் யாக்ஞவல்கியரும் எவ்வளவு விசேஷமான மனிதர்களென்பதையும் அதனால் யாக்ஞவல்கியருடன் மைத்திரேயி மண விஷயம் எளிதில் நிறைவேறக்கூடியதல்லவென்பதையு முணரலாம். என்றாலும், புலியின் சம்பவத்தாலேற்பட்ட நேர் பயன் யாதெனின், இரண்டு முனிவர்களுக்கும் விசேஷ நட்பு ஏற்பட்டது காரணமாக இரண்டு குடும்பஸ்திரீகளும், ஒருவர் வீட்டிற்கொருவர் பரஸ்பரம் அடிக்கடிபோய் வருவதே. இதன் முக்கிய பலனாகவே மைத்திரேயிக்கும் காத்தியாயனிக்கும் நெருங்கிய பழக்கம் விருத்தியாயிற்று. இக்கதையை நன்கு அறிய விரும்புகிறவர்கள் இந்தப் பெண்மணிகளைப்பற்றிச் சொல்லப்படும் விஷயங்களையும் நன்கு கவனிக்கவேண்டும்.

இவ்விரு பெண்மணிகளும் ஏறக்குறைய ஒரே வயதுடையவர்கள். தனது தோழியைவிட காத்தியாயனி சுமார் இரண்டு மூன்று வயதே மூத்தவள். இவ்விருவர் சுபாவமும் அநேகமாய் எல்லா விஷயங்களிலும் ஒன்றுக்கொன்று மாறுபட்டதாகவே யிருந்தது. இப்படி ஒருவரிடத்தில் இல்லாதகுணம் ஒருவரிடத்திலிருப்பதை இருவரும் உணர்ந்துகொண்டதே பரஸ்பரம் அன்புகொள்ள ஆஸ்பதமாயிருந்தது. காத்தியாயனி இலகுவில் எதையும் நேசிக்கும் மனமுடையவள். நேசிக்கப்படவேண்டியது மாத்திரம் அவள் கண்ணில் தென்பட்டாற் போதும். உடனே அவள் மனம் நாடிவிடும். அவள் திடமென்று மாறும் மனோ

விடத்து முகமலர்ச்சியும், வருத்தத்தைத் தரத்தக்க காட்
சியை அல்லது சங்கதியைக் கொண்டால், கண்ணீர் பெருக்
கும் தன்மையும் வாய்ந்தவள். அவள் மனம் சரளமும்
ஆராய்ச்சியு மற்றதாதலால், பொழுது போக்கான விளை
யாட்டுக்களிலும், கதைகள் கேட்பதிலுமே அதிக நேரத்
தைக் கழிப்பாளன்றி; அவளுடைய காதலன் சிந்திக்கக்
கூடிய அல்லது எடுத்துச் சொல்லக்கூடிய முக்கிய விட
யங்களுக்குக் கொஞ்சமும் செவி சாய்ப்பதில்லை. என்று
லும், அவள் நாளதுவரை தனக்குக் கடவுளருளால்
கிடைத்துள்ள இரண்டு மக்களிடத்திலும் அதிக அன்பா
யிருத்தலிலும், தனது பர்த்தாவிற்குச் செய்யும் பணி
விடைகளிற் சிரத்தையா யிருப்பதிலும் தனது முழுக்
கடமையையும் நன்குணர்ந்திருந்தாள். அவள் அநேகமாய்
நாள் முழுவதையும் தனது நாயகனுக்கு சிசுருஷை செய்
வதிலும், குழந்தைகளை வளர்ப்பதிலுமே கழிப்பாள். அவள்
வீடு சுத்தத்திற்கும், ஒழுக்கத்திற்கும் எடுத்துக்காட்டாக
விளங்கிற்று. நான் இப்பொழுது கூறிவந்த குணங்களுக்கு
அநேக விதங்களில் மாறாகவே சுமத்திரையின் குணங்கள்
இருந்தன. இவளும் உண்மையில் அன்புடையவளாயினு
லும் இவள் அன்பு அநுபவத்தில், பொருந்திய சில விஷ
யங்களிற் செல்வதாயிற்று. அந்தர்ப்பாகத்தில் இவளு
டைய கட்புலனும் செவிப்புலனும் செலுத்தப்பட்டிருந்
ததால், இன்பமும் இன்பமற்றதுமான புறத்தோற்றங்க
ளும் சப்தங்களும், இவள் மனதை யசைக்கக்கூடவில்லை.
இவள் முகம் பருவத்துக்குமேற்பட்ட ஆவலையும், வசீக
ரத்தையும் கொண்டுவிளங்கியது. சாதாரணமாக, பெண்
களின் பொழுதுபோக்காகவுள்ள விளையாட்டு, பேச்சுகள்,
கதைகள் இவளுக்கு வெறுப்பானவை யல்லவேனும்,

இவள் அவைகளில் அதிகநேரம் கழியாமல், விசேஷமாய் மௌன சாஸ்திராப்பியாசம் முதலிய காரியங்களிலேயே தனது பெரும்பான்மையான காலத்தைச் செலுத்துவாள். இவளுக்கு வீட்டு வேலைகளைச் செய்வதில், உண்மையாகப் பிரியமில்லையாயினும், தனது தந்தை வீட்டில் செய்ய வேண்டி நேரிட்ட சில அவசியமான வேலைகளைமட்டும் செய்துவந்துள்ளவள். என்றாலும், மாறுபட்ட குணங்களையுடைய இவ்விரு பெண்களுக்குள்ளும் முதிர்ந்த நட்பு வளர்ந்தோங்கியது.

காத்தியாயனி மைத்திரேயியிடத்தில் அதிக விருப்புடையவளாயிருந்தமையால் அவளது சுபாவப்படி, அவளுடன் வீற்றிருக்கும்பொழுது அதிக சந்தோஷத்தையும் அடைபவளானாள்.

ஒருநாள் பின்வருமாறு இருவரும் சம்பாஷிக்கலானார்கள்:—

**காத்தியாயனி:**—அருமைத்தோழி! உனக்கு விவாகம் முடிந்துவிட்டால் நான் எப்படித் தனித்திருப்பேன். எனது சகோதரிகளின் கலியாணமெல்லாம் எனக்குப் பெரிய ஏமாற்றத்தை விளைத்திருக்கின்றன. ஆனால் இப்பொழுது "தவலருந் தொல்கேள்வித் தன்மையுடையார், இகலிலர் எஃகுடையார் தம்முட்குழீஇ, நகலின் இனிதாயிற் காண்பாம், அகல் வானத் தும்பருறைவார் பதி." என்ற நாலடி நீதிக்கிணங்க, சாஸ்திரப்பயிற்சி யுற்றுள்ள தங்கையே! உன்னுடன் அன்பளாவியிருத்தல் பெருமகிழ்ச்சி விளைப்பதாயிருப்பதால், அவர்களினின்றும் பிரிந்துறைவதும் ஒருவாறு என்னால் சகிக்கக்கூடியதாயிருக்கி

றது. ஆனாலோ உனது பிரிவு என்னைக் கொன்றுவிடு மென்றே அடிக்கடி நினைக்கிறேன்.

மைத்திரேயி:—நீ என்னை விட்டுப் பிரிந்துறைவதாக நினைக்கவே வேண்டாம். நாம் ஒரு பொழுதும் பிரியமாட்டோம்.

காந்தி:—என்ன! அப்படிச் சொல்கிறாய்? என் சமீபத்தில் உனக்குக் கலியாணம் நிறைவேறுமானால்தானே உன்னை அடிக்கடி சந்தித்துக்கொள்ளலாம். நீ வாழ்க்கைப் படும் இடம், பக்கமாயிருக்குமென்று எப்படி நம்பக்கூடும்?

மைத்:— முதலில், எனக்குத்தான் விவாகம் ஆகுமென்று நீ எவ்வாறு யூகிக்கக்கூடும்?

காந்தி:—நீயுமா! பிரமச்சாரிணியாய் (கன்னியாய்) இருக்க விரும்புகிறாய். உனது கொள்கை மிக விநோதமாயிருக்கிறதே! எத்தனையோ புருடர் உன்னை மணக்கச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கக் கூடுமே.

மைத்தி:— நான் அவர்கள் எவருக்கும் இடங்கொடாத பக்ஷத்தில், அதாவது நான் அவர்கள் யாவரையும் விரும்பாவிட்டால் என்ன செய்யமுடியும்?

காத்தி:— நீ ஏன் மணம் புரிந்துகொள்ள மனமில்லாமலிருக்கிறாய்? எனக்கு அப்படி யிருப்பதில் பிரியமில்லை. பெண்களுக்குக் குடும்ப வாழ்க்கையே சிறந்த முறை என்பது எனது அபிப்பிராயம்.

மைத்தி:— குடும்ப வாழ்க்கை பெண்களுக்கு மாத்திரமல்ல, புருஷர்களுக்கும் சிறந்த இடந்தான். ஆனல்

ஜனங்கள் குடும்ப வாழ்க்கைதான் ஸ்திரீகளுக்குச் சிறந்த காப்பு என்று பேசுகிறபொழுது குடும்ப கைங்கர்யங்களைத் தவிர, செய்யவேண்டிய வேறு பிரவிர்த்திகள் வேறு இல்லை யென்பது அன்னார் கருத்துப்போலும்.

**காத்தி:—** வேறு என்ன பிரவிர்த்தி பெண்களுக்கு உண்டு? மதச்சடங்குகளா? யாகங்களுக்கு உதவிசெய்தல், கடவுளைத் துதித்தல், நோன்பு விரதமனுஷ்டித்தல் போன்றவையாவும், ஒவ்வொரு கல்யாணமான பெண்ணும் செய்யக் கடமைப் பட்டவளாதலால், அவைகளெல்லாம் இல்வாழ்க்கையின் தருமத்துள்ளேயே அடங்கியிருக்கின்றனவே.

**மைத்தி:—** இவைகளன்றி வேறு கடமை பெண்களுக்கு இல்லை யென்ற கருத்தா? தன்னையறிதல் அதாவது ஆத்மஞானத்தை யடைய முயற்சிப்பது முக்கிய கடமை யல்லவா?

**காத்தி:—** ஆம். அது அறிவாளிகளின் கடமை. ஆனால் பெண்களில் எத்தனை பேர்கள் கற்றறிந்தவர்களா யிருக்கிறார்கள். ஆத்மஞானத்தை யடைய நாடி முயற்சிக்கக் கூடியவர்கள் உனது சிறிய தாயார் ஸ்ரீமதி கார்க்கியைப் போன்றவர்களே; முக்கியமாய்ப் பார்க்குமிடத்து அது ஆடவர் கடமையே.

**மைத்தி:—** ஆத்மா ஆடவரிடத்தில் தான் இருக்கிறது. ஸ்திரீகளிடத்தில் இல்லை யென்கிறாயா?

**காத்தி:—** (சிரித்துக்கொண்டு) உறுதியாக ஸ்திரீகளிடத்திலுமே தான். இல்லாவிட்டால் நாம் எப்படிப் பார்க்கவும், கேட்கவும் அறியவுங் கூடும்?

மைத்தி:— அது இருபாலாரிடத்திலும் சமமாகவா அல்லது ஸ்திரீகளைவிடப் புருஷர்களிடத்தில் அதிகமாகவா?

காத்தி:— (மீண்டும் நகைத்துக்கொண்டு) இருபாலாரிடத்திலும சமமாகவே. இந்த விஷயத்தில் ஆண் பெண்களுக்குள் வித்தியாசமில்லை.

மைத்தி:—ஆன்ம ஞானம் ஏற்பட்டாலன்றி முக்தியில்லையென்பதைப்பற்றி ஸ்ரீ யாக்ஞவல்கியரின் மனைவியாகிய நீ, என்னிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டியதில்லையே?

காத்தி:—இல்லை; இதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

மைத்தி:—ஆண் பெண் ஆகிய இருபாலரும் முக்தியடையவேண்டுமென்பதும் உண்மையன்றோ?

காத்தி:—ஆம், அதைப்பற்றி யாதொரு சந்தேகமுமில்லை.

மைத்தி:— அப்படியானால், ஸ்திரீகள் முத்தி விஷயத்தை மறந்துவிட்டதுமன்றி, ஆன்ம ஞானத்தையடைய முயற்சித்தல் ஆடவர் கடமையெனவும் நினைப்பதேன்? புருஷர்கள் பொருள் தேடுவதிலும் மற்ற உலக வியவகாரங்களிலும் முயற்சியாயிருப்பது போலவேதான், பெண்களும் குடும்பக் கடமைகளையும் கவனிக்கவேண்டுவது. புருஷர்கள் உலக வியவகாரத்தில் பழகுவதோடு, முத்தியெய்த முயற்சிப்பதே வாழ்நாளின் நன்மைக்கெனக் கொண்டொழுகும்பொழுது, ஸ்திரீகளோ தங்கள் வீட்டு வேலைகளை முடித்தபின்பு, தாங்கள் செய்யவேண்டியவை

களை யெல்லாஞ் செய்தாய் விட்டதென்று நினைத்து விடுகி றார்கள். இதைவிடுந் தன்னைத்தான் மறத்தல் வேறுயாது?

காத்தீ:— அருமைத்தோழி! நீ சொல்வது முற்றி லும் சரி. உன் அருமையான வார்த்தைகள் என் இருண்ட கண்களைத் திறக்கின்றன. பால்வேறுபாடு, ஆண் பெண்களுடைய லௌகிக விஷயங்களில் தான் வேற்றுமையைச் சிறிது உண்டுபண்ணுகிறது. ஆனால் அப்படிப் பட்ட வித்தியாசம் ஆத்மாவில் இல்லை. எல்லாரிடத்தி லும் ஒரே வித ஆத்மா இருப்பதாகவே நன்கு கேள்விப் பட்டிருக்கிறேன். முத்தியடைய ஆன்ம ஞானத்தைப் பெறுதற்கு முயற்சிப்பது ஆடவர் பெண்டிர் ஆகிய இரு பாலார்க்கும் ஒத்த கடமையே! உன் சம்பாஷணை இந்த உண்மையை எனக்கு இன்று இனிது விளக்கக்கூடியதா யிற்று. இவைகளைப்பற்றி யெல்லாம் யான் முன்னரே கேள்விப்பட்டிருந்த பொழுதிலும் அவைகள் எனக்கு அப் பொழுது விளங்கவில்லை. மேலான விஷயங்களின் உணர்ச் சியை அடைய முயற்சியாமலிருப்பது பெண்களின் சொந் தக்குற்றமென்றே இப்பொழுது நான் உணர்பவளாகிறேன். எனக்குச் சந்தர்ப்பங்கள் பலவிருந்தும் அவற்றைப் பயன் படுத்திக்கொள்ளாதது முற்றிலும் எனது தவறே.

மைத்தி:— நீ அதிக அதிர்ஷ்டசாலி; அநேக பிறப்பு களில் செய்துள்ள புண்ணியத்தின் பலனாகவே அப்பேர்ப் பட்ட புருஷனை யடைந்துள்ளாய். தங்கள் புருஷர்களைத் தாங்களே தெரிந்தெடுக்கும் சுதந்தரம் பொருந்திய உயர் குலப்பெண்கள், விசேஷமாகச் செல்வவான்களும், இன்ப மிக்க யௌவன புருஷர்களாயு முள்ளவர்களையே தங்கள்

வாழ்க்கைத் துணைவர்களாக வரித்துக் கொள்ளுகிறார்களென்பது ஆச்சரியமாயிருக்கிறது. மேலும் முத்தியடைவதற்கு உதவியாயிருக்கக்கூடிய உனது கணவர் போன்ற படிப்பும் யோசனையும் ஞானமும் உள்ள புருடர்களை நாடாமலிருப்பதைப் பார்க்க ஆச்சரியப்படுகிறேன்.

சம்பாஷணையின் நிலைமையிப்படி யிருக்கையில், காத்தியாயனி வீட்டுப்பல்லக்குச் சுமப்பவன் ஒருவன், பல்லக்கை வெளியேவைத்துவிட்டு உத்தரவின்பேரில் ஸ்திரீகள் இருக்கும் இடத்திற்கு வந்து எஜமானியைப் பார்த்து "அம்மா! தாங்கள் வீட்டை விட்டு வந்து வெகு நேரமாய் விட்டபடியால், தங்கள் குழந்தைகளும் வேலைக்காரியும் தங்களை யழைத்துவரும்படியாகச் சொல்லியனுப்பினார்கள். பகலும் கழிந்துவிட்டது. பல்லக்கும் வெளியே தயாராயிருக்கிறது." என்றான்.

இதைக் கேட்டதும் காத்தியாயனி வீட்டுக்குப் புறப்பட எழுந்தனள். மதசம்பந்தமான சம்பாஷணையில் அதிக நேரங்கழித்தது அவளது ஜீவியத்தில் இதுதான் முதல் தடவை. குழந்தைகளைப்பற்றிக்கூறியதும், வீட்டில் அவள் கவனத்திலும் மேற்பார்வையிலும் செய்யப்படவேண்டிய அனேக வேலைகளின் ஞாபகமும், அவள் மனதைக் கலக்கினதினால், மித்திரர் வீட்டிலுள்ள தோழிகளிடம் விரைவில் விடைபெற்றுக்கொண்டு தன் மெய்க்காவலர் துணையுடன் வீட்டிற்குப் பல்லக்கிலேறிப் புறப்பட்டாள்.



## நான்காவது அத்தியாயம்.

---

வீடு சேர்ந்ததும், காத்தியாயனி தன் மக்களைத் தழுவிப் பாராட்டினள். பின்னர் குடும்ப காரியங்களிற் சுறுசுறுப்பா யிருந்தபொழுதிலும், மைத்திரேயியுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்த முககியமான விஷயங்களைப் பற்றிக் காத்தியாயனியால் சிந்தியாமலிருக்கமுடியவில்லை அதிகமாய்ச் சிந்திக்கவேண்டிய விஷயங்கள் அவளுக்கு நாளடைவில் அதிக மப்புமந்தாரமாய்த் தோன்றின. ஆனால் உயர்வகுப்புப் பெண்கள் பொதுவாகப் புருஷர்களைத் தெரிந்தெடுக்கும் முறைமையை சிந்தித்ததிலும், தன்னுடைய கணவரைப்பற்றி விசேஷமாய்ப் புகழ்ந்து பேசியதிலுமே அவள் மனம் அடிக்கடி சென்றது. மித்திரர் குடும்பத்தி லுள்ள மற்றப்பெண்கள் மைத்திரேயிக்கு மணஞ்செய்து கொள்ள விருப்பமில்லை யென்று கூறியதையும், கலியாணஞ் செய்துகொள்வதில் மைத்திரேயி காட்டிய விருப்பின்மையையும் இத்துடன் சம்பந்தப்படுத்திப் பார்த்தாள். "மைத்திரேயிக்கு எனது கணவரை மணந்துகொள்ள மனமிருக்குமா? அப்படியானால் எவ்வளவு அழகும் நேர்த்தியுமான சாதகமாயிருக்கும். ஒருவர்க்கொருவர் முத்திக்கு எவ்வளவு சாதகமாயிருக்கும். நான் யாக்ஞவல்கியருக்குப் பிரயோஜனமற்ற மனைவியாயிருக்கிறேனே" என்று காத்தியாயனி தனக்குள் எண்ணுவாளாயினள்.

ஸ்ரீ யாக்ஞவல்கியரிடம் சமயா சமயங்களில் இரண்டு ஆடவர்கள் சம்பாஷித்துச் செல்வாராயினர். இவர்கள் புலி விபத்தி லகப்பட்டிருந்த யக்ஞதத்தன் விஷ்ணுமித்திரன்

என்ற இரண்டு க்ஷத்திரியர்களையன்றி வேறில்லை. ஒரு நாள் விஷ்ணுமித்திரனுடன் தன் பர்த்தா வெகு நேரம் ரகசியமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில், சில குறிப்புரைகளால், மைத்திரேயி விஷயமான சம்பாஷணை நடைபெறுவதாக யூகித்தனள். பின்னர் விஷ்ணுமித்திரர் சென்றதும் தனது பிராணநாயகரிடத்தில், "நாத! தங்களுடன் சம்பாஷித்த க்ஷத்திரியர் ஏது விஷயமாக அடிக்கடி வந்து பேசிச்செல்கிறார். அதன் தாத்பரியம் யாது?" எனக் காத்தியாயனி கேட்டதன்பேரில் பின்வரும் சம்பாஷணை யாக்ஞவல்கியருக்கும் காத்தியாயனிக்கும், நடந்த பேச்சினின்றும் குறிக்கப்படுதல் அவசியமாம்.

யாக்ஞ:— எவ்வளவு ஆச்சரியம்! இதில் உனக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லையா?

காத்தி:— எனக்கு எவ்வித ஆட்சேபமுமில்லை. அப்படி நடக்குமாகில், நான் அதிக சந்தோஷமுடையவளாயிருப்பேன். இது விஷயத்தைத் தாங்கள் விருப்பமாறுபாட்டால் வலியுறுத்தாது விட்டுவிடுவீர்களாகில் அது எனக்கு மிகுந்த வருத்தத்தை யுண்டுபண்ணுவதாம். இதனைப்பற்றி முன்னரும் யான் நன்கு எடுத்துக் கூறியுள்ளேனே.

யாக்ஞ:— நீ அவளைப் பார்த்துப் பொறாமைகொள்ள மாட்டாயா?

காத்தி:— "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத் தீயுழி யுய்த்துவிடும்" என்ற திருவள்ளுவர் வாய்மொழிக்கேற்ப, பொறாமை செல்வமுதலியவற்றையுங்கெடுத்தொருவரை நரகத்தும் ஆழ்த்திவிடுவது. மேலும், நாங்கள்

என்னிடத்தில் கொண்டிருக்கிற விசேஷ அன்பில் எனக்கு ஏதாவது சந்தேகமுண்டானால் அல்லவோ, நான் பொறுமையுடையவளாகலாம். இப்பொழுதிருக்கிறபடியானால் எனக்கு ஒருவிதப் பொறுமையுமில்லை.

யாக்ஞ:— நாளடைவில் உன்னைவிட அவளை அதிகமாக நேசிக்கமாட்டேனென்று உனக்கு எப்படித் தெரியும்?

காத்தி:— அவள் விஷயத்தில் தங்களுக்குள்ள தன்மையைத்தான் தாங்களே தெளிவாக வெளிப்படுத்தியுள்ளீர்களே.

யாக்ஞ:— அவைகள் தினத்துக்குத் தினம் மாறலாம்; அதிகமாகவும் பெருகலாம்.

காத்தி:— மாறினாலும் குற்றமில்லை. அப்படி ஏற்பட்டால் நான் தப்பிதம் செய்தவளாகமாட்டேன். அவள் அதிகமாக நேசிக்கப்படவேண்டியவள். மேலும், இதையதை நேசித்தல் தேகத்திற்காக அல்ல, அந்தரியாமிக்காகவே யென்று தாங்களே சொல்லியிருக்கிறீர்களே. விளங்காத இத்தகைய அரிய விஷயங்களைத் தாங்கள் உணர்ந்திருப்பதுபோலப் பேதையாகிய என்னால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. ஆனால் சமீபத்தில் ஏற்பட்ட தர்க்கங்களாலும், "அன்பிலார் எல்லாம் தமக்குரியர், அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்ற நீதிப்பொருளைக் கேள்விப்பட்டிருப்பதாலும், தங்கள் மனைவியாயிருக்கிற காரணத்தால், அற்பமான சுயநயம் பாராட்டுதலினின்றும் மேம்படவேண்டுமென்று தீர்மானித்துள்ளேன். என்றாலும், இந்த விஷயத்தில் எனது உறுதியான என்

ளம் தாங்கள் இரண்டாவது மனைவியை மணந்துகொண்ட போதிலும், என்னைப்பார்க்கிலும் அவளை அதிகமாக நேசிக்கமாட்டீர்களென்பதே.

யாக்ஞ:— புன்சிரிப்புடன், காத்தியாயனி! உன்னை நேசிப்பதிலேயே நீ முழு நம்பிக்கையும் உடையவளாயிருக்கிறாய். நான் மாறக்கூடுமானாலும் மாற விரும்புகிறேனல்லேன்.

இன்னவிதமாகக் காதலனும் காதலியும் நெடு நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்து கடைசியாக ஓர் வித முடிவுக்கு வந்தனர். யாக்ஞவல்கியருக்கு இரண்டாவது மனைவியை யடைவதில் ஏற்பட்டிருந்த விருப்பத்தைப் பார்க்கிலும், காத்தியாயனிக்கு ஒத்துழைக்கும் மனைவி யுண்டாவதைப் பற்றி விருப்பம் அதிகமே.

ஆனால், யாக்ஞவல்கியருக்கும் மைத்திரேயிக்கும் ஏற்படக்கூடிய சம்பந்தம் ஏற்பட்டதின் பின்னர் தானே, இந்த உணர்ச்சி ஏற்படலாம், இப்பொழுது கூடாதே. சில அடையாளங்களால் அது நிறைவேறக்கூடுமென்று கண்ட பொழுது அதைப்பலப்படுத்த வேண்டுமென்றும், தன் மனதில்பெரிதும் குழம்பிக்கொண்டிருந்தாள். அதன் தன்மையை விஸ்தரிப்பதைவிட யோசனை செய்துகொள்வதே பொருத்தமானது. அநேக நாட்கள் வாரங்களாக அவ்வெண்ணம் அவளைக் கவலித்து வந்தது. கடைசியாக அவள் மனதானது கவலையை யொழிந்து சாந்தமடைவதாயிற்று. வெற்றி எவ்வளவு பூர்த்தியும் கீர்த்தியுமானதென்பது அவளது பின் நடத்தையால் வெளிப்படும். காத்தியாயனி தனது நாதனுடன் சம்பாஷிக்கும் பொழுதும் அதனைப்பற்றிச் சொல்லவில்லை.

ஆனால் புலிவிபத்து ஏற்பட்டது முதல், அவளுக்கு இன்னதென்று தெரியாத இரண்டு பிரபுக்கள் அடிக்கடி தன் கணவரைக் கிருகத்தில் சந்தித்து நெடுநேரம் சம்பாஷித்துப் போவதைக் கவனித்திருக்கிறாள். அவர்கள் அவருடைய உயிரைப் புலிவிபத்தினின்றுங் காத்த யக்ஞதத்தன், விஷ்ணுமித்திரன் என்ற இருவீரர்களே. காத்தியாயனி தன் மீது செலுத்தப்பட்டுவரும் முழு அன்பு, சக்களத்தி பொருத்தி ஏற்படுவதனால் பாதிக்கப்படுமே என்றும் கருதாது சக்களத்தி ஏற்படுவதில் சந்தோஷம் பாராட்டுவது ஆச்சரியகரமானது. இது விஷயத்தில் காத்தியாயனியும், இரண்டு பெண்டாட்டிக்காரராக ஆசையுற்றுள்ள யாக்ஞவல்கியரும் நாலாயிரம் வருஷத்திய நாகரிகம்பெற்றவராயிருக்கும் நம்மவரால் பெரிதும் குற்றங்கூறப்படவேண்டியவர்களே. அவர் எப்படி யிருந்தார் என்ன நினைத்தார் என்பதையறிய யாவரும் விரும்பக்கூடும். இரண்டாம் அத்தியாயத்திற் கூறப்பட்ட புலியின் சம்பவம் நிகழ்ந்த இரண்டு வருஷங்களின் பின்னர் தான், மித்திரமுனிவர் மகள் மைத்திரேயிக்கும் யாக்ஞவல்கியருக்கும் சிறப்பாக மணவினை முடிந்தது. அந்நாளானது "எண்ணுறு கடர்வானத்திந்திரன் முடிசூடும் மண்ணுறு திருநாளே" போன்றது

---

## ஐந்தாவது அத்தியாயம்.

---

இது முதல் இரண்டு அத்தியாயங்களிலும் மானத சாஸ்திர தர்க்கமே விரிவாக விளக்கப்படும். ஆன்மபோதத்தையளிக்கவல்ல இவ்விஷயங்களை வாசிக்க விருப்பமற்றிருப்பவர்கள் கதையின்போக்கைமட்டுங் கவனிக்க வேண்டுமானால், இவ்விரண்டு அத்தியாயங்களையும் விட்டு மேலத்தி

யாயமுதல் வாசித்துக்கொள்ளலாம். ஆனால் இவ்விரண்டத்தியாயங்களிலும் ஸ்ரீமத் யாக்ஞவல்கிய முனிவரின் இருமனைவியர் குணாதிசயங்களும் விரிவாகக் கூறப்படுவதால் இது, தத்துவ சாஸ்திர விருப்பில்லாதவருக்கும் ஓர் வித விருப்பத்தைக் கொடுக்கக் கூடியதாம்.

மைத்திரேயிக்கு மணமுடிந்து ஒருபக்ஷம் ஆனதும், ஒரு நாள் மாலை ஜெப கிருஹத்தில் முனிவர் தம்மிரு மனைவியருடன் வீற்றிருந்தார். அவ்விடம் தனித்த ஓர் அறை. அக்கினிஹோத்திரம் இப்பொழுது தான் முடிவுற்றது. பீடத்தினின்றும் புறப்படும் வாசனைத்திரவியத்தின் புகையும் வாசனையும் அறை முற்றிலும் நிரம்பியிருந்தன. தவச்சாலை நல்ல காற்றோட்டமுள்ள அறையான படியால், புகை அறையில் மண்டாது வெளியில் ஆகாயமெங்கும் பரந்தது. புகை வேகமாய்க் கழிவதை மூவரும் எதிர்பார்த்திருந்தனர். கடவுளுக்குச் செய்யவேண்டிய கடமைகளில் அவர்களுக்கு வெறுப்பில்லை. யாக்ஞவல்கியரின் பக்தியின் திறத்தையறிந்து, சாவதானமாகப் புகை முற்றிலும் வெளியாவதைக் கருதியிருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு அத்தகைய சடங்குகளில் அதிக திருப்திகிடையாது. ஆகையால் கடவுளுக்குத் திருப்திசெய்துவிட்டு, பலிகளால் மகிழாத ஆன்மா விஷயமாக, அருவமும் பரிசமற்றதுமான தியிருந்து ஆநந்தத்தையடைய நாடினார்கள். முதலில் மைத்திரேயி சம்பாஷணையைத் துவக்கினாள்.

மைத்திரேயி:— பிராணநாத! அந்த விஷயத்தை இன்னறக்கு விளக்கவேண்டும்.

காத்தி:— எந்த விஷயம்? உன்னுடைய வேண்டும் என்று சொல்லுகிறாயோ கருத்தென்னா

யாக்ஞ:—காத்தியாயனி! மைத்திரேயி ஆன்ம ஐக்கியத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுகிறாள். வேண்டுமென்றது விவாகமான நாள் முதல், அந்த விஷயத்தை விளக்கும் படியாகக் கேட்டுக்கொண்டே வந்ததுபற்றி. ஆனால்சில அசௌகரியங்களால் அது காலந் தாழ்த்தப்பெற்றது.

காத்தி:— ஆன்ம ஐக்கியத்தைப் பற்றித் தர்க்கிப்பதன் முன், ஆன்மாவைப்பற்றி யன் முதலில் தர்க்கிக்கப்படாது.

மைத்தி:— அதைப்பற்றி விசாரிக்க எனக்குத் தேவையில்லை.

காத்தி:— ஆனல், எனக்குத் தேவை ஆன்மா என்றால் என்னவென்று எனக்குச் சொல்க.

யாக்ஞ:— உனது வினவுக்கு நீயே ஏன் விடை சொல்ல முயற்சிக்கக் கூடாது?

காத்தி:— உயிருடையது ஆன்மாவென்று நினைக்கிறேன்.

யாக்ஞ:— உயிர் என்றால் என்ன? அதன்தொழில்கள் எவை? அதாவது நாம் உயிரையுடையவராயிருத்தலால் என்ன செய்கிறோம்?

காத்தி:— உயிரிருப்பதால் நாம் சுவாசிக்கிறோம். மூச்சை வெளிவிடுகிறோம்.

யாக்ஞ: தின்கிறது, குடிக்கிறது ஜீரணிப்பது முதலியவை உயிர்த்தொழில்களா?

காத்தி:— அப்படியானல் சுவாசிக்கிறது தின்கிறது குடிக்கிறது முதலிய காரியங்களைச் செய்வது தான ஆன்மாவாகும்.

யாக்ஞ:— நீ கொண்டபடி அந்தப் பொருள் இன்ப துன்பங்களை யுணராமலிருக்குமென்று வைத்துக்கொண்டால், அதை ஆன்மாவென்று சொல்வாயா?

காத்தி:— அப்படியானால் அதை ஆத்மாவென்றாது, ஒரு உயிருள்ள பொருளென்றே சொல்வேன்.

யாக்ஞ:— ஆகையால் ஆன்மாவைப் பற்றிக் கூறிய உனது விவரணம் தப்பென்று அறிவாயாக.

காத்தி:— பகுத்தறிவில்லாததை ஆன்மாவென்று சொல்லக்கூடாதென்றுணர்கிறேன்.

யாக்ஞ:— பகுத்தறிவென்று லென்ன?

காத்தி:—பகுத்தறிவென்றால் அறிதல்.

யாக்ஞ:—அறிதலுக்குத் திருஷ்டாந்தங் கூறு?

காத்தி:—உதாரணமாக, தங்களையும் மைத்திரேயியை யும் பார்ப்பதும், தாங்கள் சொல்வதைக் கேட்பதும்.

யாக்ஞ:— நீ இப்பொழுது பார்ப்பனவற்றை எப் பொழுதும் பார்க்கிறாயா, இப்பொழுது கேட்பவற்றை எப்பொழுதும் கேட்கிறாயா?

காத்தி:— இல்லை எனது கண்களைப் பொத்திக்கொள் வேனாயின், தங்களைப் பார்க்கவும் முடியாது; இந்த இடத் தினின்றும் நகரவுமுடியாது; எனது காதுகளை அடைத் துக்கொண்ட காலத்திலாவது அல்லது தாங்கள் ஒன்றும் பேசாமலிருந்த காலத்திலாவது என்னால் ஒன்றும் கேட்க வுமுடியாது.

யாக்ஞ:— ஆனால் அப்பொழுதுங்கூட உனக்கு ஞா பகமிருந்துகொண்டிருக்கிறதல்லவா?

காந்தி:— ஆம், அது இருக்கிறது.

யாக்ஞ:—பின்னும் என்ன அறிகிறோம்? ஞாபகத்திற்குப் பொருளையா? அல்லது எது?

காந்தி:— நாம் அப்பொழுது நம்மையே அறிகிறோம்

யாக்ஞ:— அப்படியானால், ஞாபகம் தன்னையறிகிற நிலையை அடங்குகிறதா?

காந்தி:— நம்மைப்பற்றி அறிகிறதில் மட்டுமல்ல, உயிர்ப்பொருள்களையறிவதிலும்.

யாக்ஞ—ஆனால் உயிர்ப்பொருள்கள் தெரியாத காலத்திலும் ஞாபகமிருக்கிறதென்று சொன்னீர்?

காந்தி—ஆம் அப்படித்தான் சொன்னேன்.

யாக்ஞ—ஆனால் நம்மை யறிகிறது தன்னறிவிற்கு அவசியமாயிருக்கிறது; அதில்லாமல் தன்னறிவிருக்கமுடியாதே.

காந்தி:— எனக்கு இது விளங்கவில்லை தன்னறிவு சில சமயம் புலன்கள் சம்பந்தப்பட்டதாயும், சில வேளை ஆன்மா சம்பந்தப்பட்டதாயுமிருக்கிறது. நாம் சில வேளை விஷயத்தையும், சிலவேளை ஆன்மவையும் அறிகிறோமா?

மைத்தி:— விஷயத்தை யுணரும்பொழுது நம்மை யறிகிறோமில்லையா?

காந்தி:— அறியலாம், அறியாமலும் இருக்கலாம்.

மைத்தி:— நாம் அதையறியவே வேண்டும். நான் குதிரையைப் பார்க்கிறபொழுது எனக்கு அவரைப் பார்க்கிறேனென்ற உணர்ச்சியே யிருக்கிறது.

**காத்தி —** நீ எப்படிப்பட்ட பார்வையினுற் பார்க்கிருயென்று எனக்குத் தெரியவில்லை. நானே அவரைப் பார்க்கும்பொழுது என்னை முற்றிலும் மறந்துவிடுகிறேன்.

இந்த உபசரணைச்சொல்லில் முனிவர் சிரியாமலிருக்க முடியவில்லை. இவ்விதம் காத்தியாயனியின் தன்னை மறந்த ஆசைதான் அவரை மயக்கிவிட்டது. ஆனல் மைத்திரேயி செய்த உண்மையான மரியாதை புகழ்ச்சிகட்கும் ஆழ்ந்த விசுவாசம் பாராட்டினர். மைத்திரேயி என்ன செய்தாலும் நிறைந்த தன்னறிவுடன் செய்தாள். முற்றிலும் மேம்பாடுற்ற ஆத்மாவுடையவள் (அதிபக்குவி). காத்தியாயனியோ என்ருல் இப்பொழுதுதான் தன்னைப்பற்றியறிய ஆரம்பித்திருக்கிருள். என்ருலும் சம்பாஷணை இடையூறின்றி நடைபெற்றது.

**யாக்ஞ.—** நல்லது. காத்தியாயனி! நீ புலன்களையறியாமல் உன்னைமட்டும் அறிகிறபொழுது, நித்தியதைப்பற்றி ஞாபகமிருக்கிறதா ?

**காத்தி.—** ஆம் சிலவேளை ஞாபகமிருக்கிறது.

**யாக்ஞ.—** அவைகளை ஒருதரம் அறிந்திருக்கிறதாக மட்டும் ஞாபகங்கொள்கிருயா?

**காத்தி.—** ஆம்.

**யாக்ஞ.—** நீயறியாத தொன்றை எங்ஙனம் ஞாபகம் வைக்கக்கூடும்?

**காத்தி.—** அறியாதது! என்ன நான் அறியாதது?

**மைத்தி.—** சிலவேளை விஷயத்தை யறியும்பொழுது உன்னையே உணராததாகவும், முனியைப் பார்க்கிறபொழுதோ உன்னையே மறந்துவிட்டதாகவும், நீசொல்லவில்லையா?

**காத்தி.**— ஆம், நான் அங்ஙனமே சொன்னேன். வேறு பொருள்களைப் பார்க்கிறபொழுது என்னையே சில வேளை மறந்துவிட்டபோதிலும், பின்னால் என்னைப்பற்றிய ஞாபகமிருக்கிறதென்பதில் என்ன பேதமிருக்கிறது.

**மைத்தி.**— ஒருகாலத்திலும் அறியாததொன்றை ஒருவரும் ஞாபகங்கொள்ளமுடியாது. அறிந்ததின் மறு தோற்றமே ஞாபகப்படுத்துவது.

**காத்தி.**— விஷயத்தை யறிதலினால் நான், என்னை அதையறிந்தவனென்று தெரியவில்லையென்று சொல்ல வருகிறாயா? ஆகையால் அவைகளை யறிந்தவனென்று என்னை நினைத்துக்கொள்ள எனக்கு முடியாததாயிருக்கிறது.

**மைத்தி.**— ஆம் அதைத்தான் நினைக்கிறது. விஷயங்களை ஞாபகஞ் செய்வதால் நீ உன்னையே அவைகளின் உணர்வாளியென்று ஞாபகஞ் செய்கிறாயாதலால் அவைகளை யுணர்ந்தவன் நீதானென்று நிச்சயமாகிறது.

**காத்தி.**— அப்படியா விஷயம்! ஆனால் அது அதிசயமாயிருக்கிறது. திரும்பவும் அதை நினையாமல் முடிவாக எனது மனதை அதில் ஆவகனம்பண்ணமுடியாதே. அறிவினது ஒவ்வொரு செய்கையிலும், நீ சொல்லுகிறபடி நாம் நம்மை அறிகிறபோதிலும் "நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன் நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன்" என நாம் எப்பொழுதும் நினைக்கிறோமில்லையே. ஆதலால் உனது சமாதானத்தை ஒப்புக்கொள்ளமுடியாது.

மைத்தி.— நாம் உண்மையில் இந்த வார்த்தைகளை நினைக்காவிட்டாலும், அவைகளின் கருத்து எப்பொழுதும் நமது தன்னறிவி லிருந்துகொண்டேயிருக்கிறது. எனது விவாகத்தின் முன்னர் என் தந்தை வீட்டிலிருக்கும்பொழுது முனிவர்மூலமாய் தன்னுணர்ச்சியில்லாமல் எவ்வளவு மந்தமும் ஒழுங்கற்றதுமான அறிவும் இருக்கமுடியாது என்று கேட்டிருக்கிறேன்.

காத்தி.— நானுங்கூட இதையெல்லாம் அவரிட மிருந்து முன்னமே கேட்டிருந்தாலும், அதை யுணரவில்லை. இப்பொழுது அதை யுணர்ந்தபோதிலும் நமது சம்பாஷணையின் முக்கியாம்சத்திற்கும் அதற்கும் ஏதாவது சம்பந்தமிருக்கிறதென்பது விளங்கவில்லையே.

மைத்தி.— சம்பந்தம் இது. நீ இரண்டாவதாக ஆன்மா தன்னையாவது விஷயத்தையாவது அறியலாம் என்பது விஷயத்தை யுணருங்காலத்திலுங்கூட ஆன்மாவையறிகிறோம், முந்தியதை அறியாதபொழுதும் அதை யறிகிறோமாதலால் ஆன்மாவை யறிதலே மூலாதாரமும் முக்கியமுமான அறிவுஎன்பதை யிப்பொழுது அறிவாயாக

காத்தி.—அப்படியானால், மாறுதலற்ற ஆன்ம அறிவு மாறுதலுடைய விஷய அறிவு, என்ற இரண்டுவித அறிவு உண்டா?

மைத்.—நீ ஏன் பொருள்களின் அறிவை மாறக்கூடிய தென்கிறாய்?

காத்தி.—ஏனென்றால், அது நம்மிடத்தில் எப்பொழுது மிருக்கிறதில்லை. நான் முனிவரைப்பார்க்கிறபொழுது

உன்னை எப்பொழுதும் பார்க்கிறேனில்லை. உன்னைப் பார்க்கிறபொழுது முனிவர் எனது ஞாபகத்திலில்லாமலிருக்கிறார்.

மைத்தி.— ஆனால், பார்த்தும் மறந்துபோனதான பொருளைப்பற்றிய அறிவு நமக்கு ஏற்படுகிறதே. நான் நேற்று அறிந்திருந்து மறந்துவிட்ட பொருள்களை இன்று திரும்பவும அறிகிறபொழுது நேற்று அறிந்த அதே பொருள்களென்றே ஞாபகங்கொள்கிறேன். ஆன்ம அறிவைப் போலவே பொருள்களின் அறிவும், (விஷய அறிவும்) நிலையுள்ளதென்று இதனால் விளங்கவில்லையா?

காத்தி.—ஆனால் தன்னறிவு உறுதியாயிருக்கிறபொழுது விஷய அறிவு போவதும் வருவதுமாயிருககிறதே?

யாக்ஞ.—குறித்த பொருளின் அறிவுபோய்விடும்பொழுது அந்தப்பொருளை யறிந்துள்ளது என்ற தன்னறிவும் விஷய அறிவைப்போலவே மாறுதலுடையதாயிருக்கிறதே

மைத்தி.—ஆனால் ஒரு புதிய வஸ்துவை அறிகையில் முன்னால் வேறுபொருளை யறிந்துள்ள அதே தன்னறிவு தானென்று என்னை யறிகிறேன். ஆகையால் தன்னறிவு இரு செய்கையிலும் உறுதியுடையதாகவே யிருக்கிறது.

யாக்ஞ.—உன்னால் கூறப்படுகிறபடி விஷய அறிவு தன்னறிவைப்போலவே உறுதியாயுள்ளது. ஆன்ம ஐக்கியத்தை இரண்டு தொடர்ந்த செய்கையினறிவினால் அறிவதில் இருதொழிலுமுள்ள விஷய அறிவு (பொருளின் அறிவு) ஞாபகத்திற்கு ஒருசேரக்கொண்டு வரப்படவேண்டும்.

மைத்தி.—ஆனால் சுசுப்தியில், நாம் பொருள்களை முற்றிலும்மறந்துவிட்டகாலத்திலும் ஆன்மாவை (தன்னறிவை) அறிகிறோம்.

யாக்ஞ.—நாம் உலகத்தை மறந்துவிட்டால், நம் ஆன்மாவையும் மறந்துவிடுகிறோம். அதாவது நம்மை நாமே அறிகிறோமில்லை. நம்மை நாம் திரும்ப அறிகிறபொழுது விஷயத்தையும் அறிகிறோம். நாம் எதை தன்னறிவென்கிறோமோ அதுவும் பொருளறிவைப்போல் உறுதியற்றதும் வழுவக்கூடியதுமேயாம்.

மைத்தி.—நான் இதற்குமுன் இருந்ததைவிட இப்பொழுது அதிகக் குழப்பத்திற்குள்ளாகி விட்டேன். தாங்கள் சொல்வதிலிருந்து ஒவ்வொன்றும், நம்பிக்கையில்லாமல் மாறுதலடையக் கூடியதும் அழியக்கூடியதுமாகத் தெரிகிறது. ஆன்மா அறிகிறவனாகத்தான் நிலைக்கும் ஆனால் நாம் சுசுப்தியில் தன்னறிவையும் விஷயத்தையும் இழந்துவிடுவோமானால், ஆன்மா எப்படித் தங்குகிறது? சுசுப்தியில்லாமலிருந்த அறிவு சாக்கிரத்தில் எவ்விதம் திரும்பத் தோன்றுகிறது?

யாக்ஞ—உனது குழப்பம் உண்மையான ஆத்மாவையும் மனதையும் ஒன்றாய் நினைத்ததிலிருந்து உண்டாயிருக்கிறது. மனம் ஒருவிதத்தில் ஆத்மாவினுடன் சம்பந்தமுடையதேனும், மற்றொரு விதத்தில் அதினின்றும் வேறானதே. கேள்வியிலுள்ள மாறுதல்கள் ஆத்மாவின் மாறுதல்களல்ல, மனதின் மாறுதல்களே.

**கார்த்தி**—மனமென்றாலென்ன? அது எவ்விதம் ஒரு விதத்தில் ஆத்மாவோடு ஒற்றுமையுடையதாயும் வேறு விதத்தில் வேற்றுமையுடையதாயுமிருக்கிறது.

**யாக்ஞ.**—நாம் பேசிக்கொள்கிற வேறுதோற்றங்கள் அல்லது மாறுதல்கள் வேறு பொருளின் மாறுதல்களாயிருக்கவேண்டும். அவைகள் ஒருபொருளின் பலஸ்திதி. அந்தப்பொருள் ஆத்மாவல்ல. சாக்கிரத்தில் ஒவ்வொரு பொருளின் மறுதோற்றத்தையும் நீ பார்க்கிறபடியால், ஒவ்வொருபொருளும் ஆத்மாவில் நிலைபெற்றிருக்கிறது. ஆகையினால்தான் இந்த மாறுதல்களுக்கா , ஒரு பொருளைக் குறித்து மனதென்று சொல்லுகிறோம் இந்த விஷயத்தில் ஆத்மாவினின்றும் மனம் வேறு. ஆனால் ஒவ்வொரு பொருளும் அவசியமாய் ஆத்மாவினுடன் சம்பந்தமுடையதாய் அதன் அம்ஸமாக இருக்கிறது இந்த விஷயத்தில் ஒவ்வொரு பொருளின் குணிப்பொருளாய மனமும், ஆத்மாவில் ஒன்றாயிருக்கிறது.

**மைத்தி.**—ஆ! இப்பொழுது அறிந்தேன்; என்னுடைய சந்தேகங்கள் எவ்விதம் தெளிவிக்கப்பட்டன. அந்த மகாசபையில் தாங்கள் ஆன்மா எல்லாப்பொருள்களையும் உள்ளிருந்து ஆளுபவன் என்றீர்கள். சில வேறு பொருள்களை உதாரணமாகச்சொன்னபொழுது மனதையும் ஒன்றாகக் கூறினீர்கள். தாங்கள் ஆத்மா பஞ்ச பூதங்களையும் ஆளுபவன் என்றீர்கள். அவைகளை நன்கறிந்தேன்; ஆனால் மற்றைப் பொருள்களைப்போல மனமும் அறிவற்றதும், சார்புள்ளதும் ஆன்மாவினால் ஆளப்படுவதுமானது என்று சொன்னதை அப்பொழுது அறியாமலிருந்தேன்; இப்பொழுது அறிந்துகொண்டேன்.

**காத்தி** — அதிக காலமாகிறபடியால் இன்றிரவு இத்துடன் நிறுத்திக்கொள்ளவேண்டாமா?

**மைத்தி:**—எனது கேள்விக்குப் பதிலின்னும் வரவேயில்லையே! கேட்டது கேட்டதாகத்தானே யிருக்கிறது; உனது கேள்விக்குத்தான் பதில் கூறப்பட்டிருக்கிறது, ஆன்மா இயற்கையிலேயே அறிவுடைய தென்பதையும் அதன் அறிவு உறுதியுடையதும் மாறுதலற்றதுமானது என்பதையும், அறிந்தோம். இப்பொழுது எனது கேள்வியாவது; நம் ஒவ்வொருவரிடத்திலும் வெவ்வேறு ஆன்மா இருக்கிறதாகத் தோன்றுகிறபடியால், எல்லாரிடத்திலும் ஒரேவித ஆன்மா இருக்கிறதென்று எப்படி அறிகிறது என்பது.

**யாக்ஞ** — நீ உண்மையான ஆன்மாவை அறிகிறபொழுது, அதே ஒன்றாகவும் பலவாகவுமிருக்கிறதாக அறிவாய். சுத்தமான வரம்பற்ற ஆன்மாவிற்குள்ள வேறுபாடுகள் அநித்திய (அழிதலையுடைய) ஆன்மாக்களுக்குள் இல்லை. ஆனால் விஞ்ஞானத்திலுண்டு

**காத்தி.**—விஞ்ஞானமென்பதன் தாற்பரியமென்ன?

**மைத்தி:**—எனக்கும் இது தெரிய வேண்டும். அந்தப் பெரியசபையில் அந்தர்யாமியைப்பற்றிப் பேசியபொழுது மனதைப்போலவே விஞ்ஞானத்தையும் பிரித்துக் கூறினீர்கள். ஆத்மாவிற்கும் மனதிற்கும் உள்ள வித்தியாசத்தைத் தெரிந்துகொண்டேன். ஆனால் ஆத்துமாவிற்கும் விஞ்ஞானத்திற்குமுள்ள வேற்றுமை தெரியவில்லை.

**காத்தி.**—அவ்வளவு விஷயங்களையும் எவ்விதம் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறாய்? முனிவர் மொழிகளையே ஒப்புவிப்பாய் போல் தெரிகிறதே!

மைத்தி.— ஆம், என்றால் கூடும், ஆனால் எனது சாமர்த்தியத்தால் அல்ல, ஏனென்றால் முனிவர் தமது சொல்லை வற்புறுத்துவதற்காக, அதே வார்த்தைகளை அடியிற் கூறியபடி அடிக்கடி பிரயோகித்தார். "அது விஞ்ஞானத்தில் தங்கியிருந்தபோதிலும்,விஞ்ஞானத்தினின்றும் வேறு, விஞ்ஞானம் அதைபறியாது. அது தனது சரீரமாகிய விஞ்ஞானத்திலிருந்து அதை ஆளுகிறது. அது தான் அழியாத அந்தர்யாமியாகிய நீ" சுத்தமான ஆன்மாவினின்றும் விஞ்ஞானம் எப்படி வேறுபட்டுள்ளதென்பதை இப்பொழுது அறிய விரும்புகிறேன்.

காத்தி.—முதலில் விஞ்ஞானமென்றாலென்ன என்பதையும், நம் ஒவ்வொருவரிடத்திலும் அப்படிப்பட்ட ஒரு பொருள் இருக்கிறதென்று எப்படி அறிகிறதென்பதையும் சொல்லியருள்க.

யாக்ஞ —உனக்கு ஒவ்வொன்றையும் விளக்க அதிக சந்தோஷமுள்ளவனாயிருக்கிறேன். நான் இப்பொழுது வெகு நேரமாக அதைச் சொன்னாலும் உனக்குத் திருப்தியுண்டாகமாட்டாது. அப்படியிருந்து கேட்கச் சம்மதமா?

மைத்—எனக்கு முற்றிலும் சம்மதம் இராமுழுதென்றாலுமென்னாலிருக்கக்கூடும்.

காத்தி—(என்விஷயத்தில்) நானோ அப்படிச் சொல்லமுடியாது. நான் இப்பொழுதே களைத்துத் தூக்கமுடையவளாயிருக்கிறேன்.

மைத்தி— நீதூங்கவேண்டுமானால் போய்விடு; எனக்கு முனிவருடன் கொஞ்சம் அதிகநேரம் பேசிக்கொண்டிருக்க

வேண்டும். நான் நாளைக்கு எங்களுக்குள் நடந்த சம்பாஷணையை உனக்குச் சொல்கிறேன்.

காத்தி.—ஒவ்வொரு சொல்லையும் நானே கேட்டாலொழிய எனக்குத் திருப்தி வராது. ஆகையால் இப்பொழுது நிறுத்தித் தூங்கப் போவதே நலம். மேலும் நான் தூங்குவதற்கு முன், முனிவரிடத்தில் வேறு சில சங்கதி பேசவேண்டும்.

மைத்திரேயி அச்சொல்லைக் கேட்டு, தன் சக்களத்தியைப் புருஷனுடன் இருக்க விட்டுவிட்டு, தான் தனது வழக்கப்படி தபோகிருகத்தில் முனிவரிடத்தில் தான் கேட்டவைகளையெல்லாம், கூடக்கொஞ்சநேரம் இருந்து சிந்திக்க உட்கார்ந்தாள். முனிவரின் உடல் காத்தியாயனியிடத்தும், ஆவி மைத்திரேயியிடமுமாய் இருந்தன.

## ஆறுவது அத்தியாயம்.

மறுநாள் சாயந்திரம் தர்க்கம் முனிவராலேயே துவக்கப்பட்டது. நாம் ஒவ்வொருவரும் எதை நமது ஆத்மாவென்று சொல்கிறோமோ அதே, பரமாத்மாவாக இருக்கிறதென்று காட்டப்படுமானால், உனக்கு ஆத்மாவின் ஐக்கியத்தைப்பற்றி நன்கு தெரியவரும். ஆனால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே தன்மையது என்று நமக்கு எப்படித் தெரியும்? நான் நேற்றுச்சொன்னதுபோல வியாபக ஆன்மாவாகியஉண்மை ஆன்மா பகுக்கப்படாத ஒன்றே என்று மட்டு மறியவேண்டும். எல்லா மனிதர்களிடத்திலும் வஸ்துக்களிடத்திலும் ஒரேவித ஆன்மா இருக்கிறதென்பதை

ஜனங்கள் அறிகிறார்களில்லை. உனக்குப் பரமாத்மாவைப் பற்றி அறிவு இருக்கிறதா? அல்லது அநேக ஜனங்களுக்கு நம்பிக்கைப் பொருளாயிருப்பதுபோலத்தான் உனக்குமிருக்கிறதா? என்பதையறிய வேண்டுகிறேன்.

மைத்தி—நான் ஒவ்வொன்றும் பிரமமென்றே அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறேன். எந்த வஸ்துவிலும் நமக்குத் தெரிகிற எல்லாப் பொருள்களிலும் பரமாத்மா இருக்கிறதென்ற பயனற்ற எண்ணம் எனக்குண்டு. ஆனால் எனது கொள்கையை எவ்வளவு தூரம் விளக்கக்கூடுமென்று எனக்குத் தெரியவில்லை.

காத்தி—உன்னால் கூடிய அவ்வளவு முயல்வாயாக.

யாக்ஞ.—நமது நேற்றைய சம்பாஷணையுமிதற்குதவியாயிருக்கும். இந்த அறையைப்பற்றி நீ அறிகிறபொழுது வேறு எதையாவது அறிகிறாயா என்பதை யெனக்குச் சொல்?

மைத்தி.—இந்த அறையை அறிகிறபொழுது எனது ஆன்மா அதை அறிகிறதென்று தெரிகிறேன்.

யாக்ஞ.—இந்த அறையை அறிகிறபொழுது உனது ஆன்மாவைத்தவிர வேறு ஆன்மா அறிகிறதா?

மைத்தி.—இல்லை.

யாக்ஞ.—ஆனால், இந்த அறை பரமாத்மாவிற்குள் அடங்கியிருக்கிறதாகவாவது, அல்லது அப்படி இருப்பதாகவாவது நம்புகிறாயா?

மைத்தி—ஆம், நான் அதை நம்புகிறேன். ஆனால் எனக்கு விளங்கவில்லை,

யாக்ஞ.—படிப்படியாக நீ அதை அறிவாய், உனக்கு அதை தெரிந்த பொருளென்பதைத் தவிர அதைப்பற்றி வேறு அபிப்பிராயம் கொண்டிருக்கிறாயா?

மைத்தி.—இப்பொழுது அது தெரிந்த பொருளாயிருக்கிறது. ஆனால் சிலவேளை தெரியாமலிருக்கும் பொருளாயுமிருக்கலாம்.

யாக்ஞ.—அது தெரியாத பொருளாயிருக்கும்பொழுதும் இப்பொழுதிருக்கிறபடியே இருக்கிறதா?

மைத்தி.—இப்பொழுது இருக்கிறபடியேதான்.

யாக்ஞ—இப்பொழுது அது தொட்டறியக்கூடியதாயுங் கண்டறியக்கூடியதாயுமிருக்கிற மேற்கண்ட நிலைமையுடையதாகவே எப்பொழுதுமிருக்குமா?

மைத்தி.—அப்படித்தான் ஆனால் அறிந்தபொருள் அறியப்படாத பொருளாயிருக்கிற பொழுதும், ஒரே தன்மையை யுடையதாயிருக்கிறதென்பதனால், முன்னுக்குப் பின் மாறாகச் சொல்கிறேனே!

யாக்ஞ.—பிரபஞ்சத்தை உள்ளபடியறியாதவர்களெல்லாரும் முரண்படுகிறதுபோலவே, நீயும் முரண்படுகிறாய்.

மைத்தி.—அப்படியானால் அதையும் எப்பொழுதும் தெரிந்தபொருளென்றே கொள்ளப்படவேண்டும்போலும்.

யாக்ஞ.—ஆனால் அதை அறியப்படாத பொருளாயிருக்கும் பொழுது மற்றை அம்சங்களையுடையதாகவுந் தெரி

த்துள்ளதென்பதைமட்டும் மாற்றிக்கொள்கிறதென்பதாக வைத்துக்கொள்வோம்.

மைத்தி.—அது எப்படி இருக்கக்கூடும். அறையின் எல்லாப் பொருள்களும் தெரிந்த பொருள்களே! அறையின் எல்லாவஸ்துக்களும் அறியப்படுபொருளேயாதலால், அறிந்தபொருளென்று நினைப்பதைத் தவிர வேறுவிதமாக நினைக்க முடியவில்லையே!

யாக்ஞ.—அப்படியானால், எப்பொழுதும் அறையை உனக்குத் தெரிந்த பொருளாகவே கொள்ளவேண்டும். உனக்கு வேறு அபிப்பிராயமில்லை யென்கிறாயா?

மைத்தி.— எனக்குமட்டுமல்ல, பிறராலும் அறியப் படலாம்.

யாக்ஞ.—ஆனால் அது இப்பொழுது உன்னுடைய அறிவிலிருக்கிறது.

மைத்தி.—ஆம்; அப்படியே.

யாக்ஞ.—அதன் ஒவ்வொருபாகமும் உன் ஞாபகத்தில் இருக்கிறது.

மைத்தி.—ஆம், அதன் ஒவ்வொரு பகுதியும் என் ஞாபகத்திலிருக்கிறது.

யாக்ஞ.—உன்னுடைய அறிவுதான் உன் ஆன்மாவோ?

மைத்தி.—ஆம்

யாக்ஞ.—அப்படியானால், அறை உனது ஆத்மாவிலிருக்கிறதா அல்லது ஆன்மா அறையிலிருக்கிறதா?

மைத்தி.—அப்படியே தோன்றுகிறது.

யாக்ஞ.—அந்த அறை நீ இப்பொழுது பார்க்கிறது போலவே எப்பொழுது மிருக்குமா?

மைத்தி.—எல்லாவற்றையும் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிருக்கிறதென்பதைப் பார்க்க எனக்கே அதிசயமாயிருக்கிறது.

யாக்ஞ.—ஜனங்கள் பொருள்களை யறிகிற பொழுது தங்கள் ஆத்மாவையும் அவைகளில் செலுத்தி அவைகளை யறிந்தபின் தங்கள் ஆத்மாவைத் திருப்பிக்கொள்கிறார்களென்ற பாவனையினால்தான், ஆச்சரியமேற்படுகிறது. ஆகையினால் தான் பொருள்களை யடக்கிக் கொண்டிருக்கிறதும், அவைகளுக்கும் நமக்கும் ஆதாரபூதமானதுமான ஆத்மாவை அவைகளில் கண்டுகொள்கிறோம்.

மைத்தி.—தங்களின் சொற்ப வார்த்தைகளால் எவ்வளவு சங்கதிகளை அறிகிறேன்.

காத்தி.—வஸ்துக்களை யறிகையில் அவைகளில் ஆத்மாவைக்கண்டு பிடிக்கிறோம் என்று தாங்கள் சொல்லுகிறபடியால் நாம் அவைகளில் அதை அறிந்து கொள்கிறதற்கு முன்னுகவே அவைகளில் அது தங்கியிருக்கிறதல்லவா?

யாக்ஞ.—அது உண்மைதான்.

காத்தி.—அப்படியானுல் அது விஸ்வாத்மாவா?

யாக்ஞ.—ஆம், அதேமாதிரி விஸ்வாத்மாதான்.

மைத்தி.—அந்த மகா சபையில் தாங்கள் பேசிய பாசமும் (ஆன்மபந்தமும்) அதுவா?

யாக்ஞ.—ஆம், நான் கூறிய பாசமும் அதுதான். ஆனால் பெரிய கூட்டத்தில் அவ்வளவு தெளிவாக அதை விளக்கவில்லை.

மைத்தி.—இப்பொழுது எங்களுக்கு அதைத் தெளிவாய் விளக்குக

யாக்ஞ.—நீங்களே அதையறிந்து சொல்லக்கூடியவர்களாயிருக்கிறீர்கள், எவ்விதம் பொருள்களைப் பந்திக்கிறதென்று யோசித்துச் சொல்லுங்கள்.

மைத்தி.—அது என்னையும் நான் அறிகிற பொருள்களையும் பந்திக்கிறது. அது என்னிடத்திலும் அவைகளிடத்திலு மிருக்கிறது. எனது ஆத்மாவும் அவைகளின் ஆத்மாவும் ஆகிய இரண்டும் அதாயிருக்கிறது சபையில் தாங்கள் சொல்லிய சொற்களையே ஒப்பிக்க வேண்டியதாயிருப்பதறிய எவ்வளவு ஆச்சரியம்!

காத்தி.—அது எப்படி உன்னையும் என்னையும் கட்டுப்படுத்துகிறது. எப்படி நான் உனது ஆத்மாவே எனது ஆத்மாவென்று அறியக்கூடும்.?

மைத்தி.—ஜகத்தை யறிகையில் விஸ்வாத்மாவும் உன்னுடைய ஆத்மா போன்றதென்றே அறிகிறாய். பிரபஞ்சத்தைப்பற்றிய எனது அறிவோ, பரமாத்மாவுடன் எனது ஆத்மா ஐக்கியப்பட்டிருப்பதாகக் காட்டுகிறது. ஆகையினால் தான் உனது ஆத்மாவும் ஒன்றென்று பெறப்படுகிறது.

காத்தி.—தெரிகிறது. ஆனால் உனக்கும் எனக்கும் வித்தியாசங்களும் இருக்கின்றனவே. அவைகளை எனக்கு விளக்கிக்காட்டு?

யாக்ஞ.—நான் விஞ்ஞானாத்மாவைப்பற்றி விளக்கும்பொழுது அவைகள் விளக்கப்படும். இப்பொழுது பாசத்தைப்பற்றி உனக்கு இன்னும் அதிகந்தெரிவதைச்சொல்.

மைத்தி.—பாசமானது, பரிமாணத்தின் பற்பலபாகங்களையும் ஒன்று சேர்க்கின்றது. பரப்பின் பலபாகங்களும் சம்பந்தம்பட்டவைபோல அறிந்து யோசிக்கையில் ஒரு அறிவுடைய ஆத்மாவில் அவைகளிருப்பதாக அறிந்து நினைத்துக்கொள்கிறேன்.

யாக்ஞ.-பரப்பின் பலபாகங்களும் சம்பந்தமுடையனவென்பதும் முக்கிய வெளிகள் பாகுபடாத வெளியொன்றில் அடங்கியிருக்கின்றனவென்பதும் உனக்குத்தெரியுமே.

மைத்தி.—எனக்கு அது தெரியும். அதனால் விஸ்வாத்மா அல்லது பாசம் பிரிவுபடாத ஒன்றென்று பெறப்படவில்லையா.

யாக்ஞ.—அப்படியே பெறப்படுகிறது. எவ்வளவு ஆச்சரியமாக எனது சொற்களைக் கிரகித்துக்கொள்கிறாய்! எல்லா வெளியிலும் விஸ்வாத்மாவும், எல்லா வெளியும் விஸ்வாத்மாவிலும் இருக்கிறதை அறிகிறாய். வேறு விதமாகச்சொன்னால் அது பரப்பின் பாகங்களுக்கு (அளவைக்கு) அதீதமானது. மேலுஞ் சொல்.

மைத்தி.—திரும்பவும் அந்தப் பரமாத்மா காலத்தின் பலபருவங்களையும் பந்தித்திருக்கிறதாகத் தெரிகிறது.

ஏனென்றால் ஒன்றின்பின்னொன்றாய் நடைபெறுகிற வர்த்த மானங்கள் மாறுதலில்லாத சான்றாக இருக்கின்றன.

யாக்ஞ—முற்றிலும்சரி ஆகையால் பரமாத்மா நித்தி யமாய் அல்லது காலாதீதமாயிருக்கிறதென்பதை யறிகிறா யல்லவா?

காத்தி—அது மாறுதலடையாததனால் அது நித்திய மானது என்று சொல்கிறீர்கள். இப்படியாயின் இயற்கை யின் மாறுதல்கள் எதனுடையவை?

மைத்தி.—எல்லா மாறுதல்களும் மனதின்மாறுதல்கள் தான்.

காத்தி—ஆனால் நம்மில் மனம் வரையறைக்குட்பட் டது. பிரபஞ்சமாறுதல்கள் அதன் மாறுதல்களாயிருக்க முடியா?

யாக்ஞ:—நாம் அப்படி வைத்துக்கொண்டால் பிர பஞ்ச மனம் பிரபஞ்ச மாறுதல்களுடைய பாசம்தானே?

காத்தி—ஆனால் பரமாத்மா பிரபஞ்ச வர்த்தமான த்தை அறிகிறபொழுது மாறுகிறதில்லையோ?

யாக்ஞ.—அறிவு மாறுதலுடையதல்ல, ஆனால்ஆன்மா வின் சாஸ்வதமான சொத்து. மைத்திரேயி சொன்னது போல் பரமாத்மா வர்த்தமானங்களை விகாரமில்லாமற் பார் த்துக்கொண்டேயிருப்பது. வர்த்தமானங்களின் அறிவு வர்த்தமானம் அல்ல. இதனால் வர்த்தமானங்கள் ஏற்படு வதற்கு முன்னும் பின்னும் பரமாத்மாவினிடத்தில் வர்த்தமான அறிவு இருக்கிறதாகவே தெரிகிறது, அவரு

க்கு இங்கு அங்கு என்ற வேற்றுமையில்லாததுபோல் இப்பொழுது பிறகு என்ற வேற்றுமையுமில்லை.

மைத்ரி — ஆகையினுல்தான் நமது மனதிலிருந்து வெளியேபோய், கொஞ்சநேரத்திற்கில்லாமலிருந்த பொருள்கள் திரும்ப நம்மிடத்தில் வரும்பொழுது, அவைகள் நம்மிடத்திலேயே எப்பொழுதும் தங்கியிருந்தனவென நமது அறிவு உணர்த்துகிறது.

காத்தி — ஆனுல் நம்முடைய அறிவுமாறுதலுடையதல்லவா? நான் இந்த அறையைப்பற்றி அறிகிறபொழுது, அறியாமையென்ற நிலைமையிலிருந்து அறிவாகிய நிலைக்குக் கடப்பதினுல் ஒரு மாறுதலிருக்கிறதே?

மைத்ரி — ஆனுல் நாமறிகிறதற்கு முன்னரேகூட, பரமாத்மாவிற்கு இந்த அறையைப்பற்றிய அறிவு இருக்கிறதோ அதற்கு அது ஒரு சொத்தாக அல்லது இயல்பாகவிருக்கிறதேயொழிய ஒரு செய்கையாயல்ல.

யாக்ஞ....அவரைப்பற்றிச் சொல்லுகிறபொழுது அவர் அறிகிறார் என்ருது அறிந்துகொண்டிருக்கிருரென்றே சொல்லவேண்டும். அவர் கர்மமற்றவராயும் கர்மகர்த்தரல்லாதவராயுமிருக்கிருர்.

காத்தி.—நாம் அறையை அல்லது ஏதாவது பொருளையறிகிறபொழுது நமது ஆத்மா தொழிலைச் செய்கிறதில்லையா, அதன் அறிவு ஒரு தொழில்லவா?

யாக்ஞ — இப்பொழுது விஞ்ஞானத்மாவைப்பற்றிக் கவனிக்கிருய். பரமாத்மா முழுமையும் தொழிலைச் செய்கி

றதுமில்லை, மாறுகிறதுமில்லை. அவர் தத்துவமென்று சொல்லக்கூடிய விதமாக, ஒவ்வொரு பொருளையும் வர்த்தமானத்தையும் அறிகிற அறிவும் அவரிடத்திலேயேயிருக்கிறது. ஆனால் அவர் தம்முடைய தத்துவத்தின் பகுதியாகிய ஜீவான்மாவைச் சில ஆச்சரியமானவிதமாய் வித்தியாசப்படுத்தும்பொழுது, இந்த ஜீவான்மா முன்னால் அறியாததை அறிகிறதுபோலும், தனது அறியாமையாகிய நிலைமையிலிருந்தே அறியப்போகிறதுபோலும் ஒருவிசித்திரியாகத் தோன்றுகிறது. அப்படி வித்தியாசமுற்ற ஜீவான்மாவைப் போன்ற பராத்மாதான் விஞ்ஞானாத்மா. தத்துவத்தில் பரமாத்மாவுடன் ஒற்றுமையுடையதாக இருப்பினும் பரமாத்மாவின் அம்சங்களை, பகுதிகளாகக்குறித்த காலத்திலும், அளவிலும், அறிகளிற் பரமாத்மாவினின்றும் வித்தியாசப்பட்டதாக விருக்கிறது.

மைத்தி.— தங்கள் தெளிவுரை, கேட்கவேண்டியதுவேறில்லாமற் செய்துவிட்டது இப்பொழுது எனக்கு நிவிர்த்திசெய்யவேண்டிய சந்தேகங்கள் யாவுமில்லை. முன்னர்கொண்டிருந்த அபிப்பிராயங்களை யொழிப்பதுதான் அசாத்தியமாகத்தோன்றுகிறது. இப்பேர்ப்பட்ட அபிப்பிராயங்களில் அதிகம்பற்றியுள்ளது ஒன்று;—இந்த உலகத்தில் நமக்கு விஷயங்களிருக்கிறதென்பதும், பிரபஞ்சத்தை யறிகிறதில் ஆன்மாவிற்குச் சம்பந்தமற்ற விஷயங்களை அறிகிறோமென்பதும், ஆனால் நாம் எவ்விதப்பொருளை யறிகிறபொழுதிலும் அதனுடன் ஆத்மாவையும் அவசியம் அறிகிறோமென்பதும், ஆத்மாவின்றி ஒன்றையும் உணரக்கூடாதென்பதும் நேற்றைச் சம்பாஷணையால் எங்களுக்கு விளக்கப்பட்டன. இன்றைய சம்பாஷணையால்,

எந்தப்பொருளையும் ஆத்மாவிற்கு வேறாக நினைக்க முடியா தென்பதும், நாம் பொருள்களை நினைக்கிறபொழுது அவை களை ஆத்மாவிற்குச் சம்பந்தப்பட்டவைகளாக அல்லது ஆத்மாவிலேயே யிருக்கின்றனவாக அறிகிறோமென்பதும் அறியப்படாத பொருளாக அதையை நினைக்கமுடியு மென்று நான் சொன்னதுபோல் நாம் நம்பி அதைச்சொல் லும் விதத்தில் விபரீதமான தப்பிதத்தைச் செய்தபோதி லும் உலகம் பரமாத்மாவிலிருக்கிற தென்பதைத் தவிர வேறுவிதமிருப்பதாய் நம்பமுடியாதென்பதும்; தெளிவான தள்ளமுடியாத முடிபுகளாகப் பெற்றோம்.

காத்தி.—வியவகாரத்தின் முக்கியாம்சங்களை எவ்வ ளவு சங்கிரமாகத் தொகுத்தது எனது மந்த புத்தியும் அதன் கருத்தைக் கிரகிக்கும்படி உபகரித்தது வியப்பே; நீ இல்லாவிட்டால் என்னால் என்னைப்?

மைத்தி.—(புகழ்ச்சியில் விருப்பில்லாதவளாய்ச் சிறிது வெறுத்து) அப்படிப்பட்ட சகாரப்த்தில் என்னுடைய சச்சரவு செய்யக்கூடாது, ஏதாவது நிவிர்த்தி செய்யவேண் டியவையிருந்தால்மட்டும் சொல்?

காத்தி.... வியவகாரத்தையெல்லாம் ஒரு கொட்டைப் புறக்களவில் சுருக்கினது கஷ்டத்தை நிவிர்த்தி செய்து வ்வாயென்றுதானே சொல்லிக் கொண்டிருக்கிறேன். நாம் ஆத்மாவில் உலகம் இருப்பதாக அறிகிறதினாலும், ஆத்மாவில் உலகத்தை நினைக்கிறபடியாலும் உலகம் ஆத்மா விலிருக்கிறதென்று நாமபேண்டியதைத் தவிர வேறில்லை. ஆத்துமாவிலில்லாத உலகம் நமக்குத்தெரியாததும் நினைக்

கவும் நம்பவு முடியாகதுமான ஒன்றே. வேதசாஸ்திரிகள் சொல்லுகிறபடி (பாஷாரம்மனம்) வெறும்வார்த்தைகளட ங்கியதென்றே சொல்கிறோம். அவர்கள் சொல்கிற பதத் தின் பொருளை யிப்பொழுது அறிந்துகொண்டேன்.

யாக்ஞ.—காத்தியாயனி! முழுவிஷயத்தின் தன்மை யினையும் நீ அறிந்துகொண்டதற்காக அதிக சந்தோஷப் படுகிறேன். உனக்கு வேறு ஏதாவது கேட்கவேண்டிய துண்டா?

மைத்ரி.—முன்கொண்ட கொள்கைகளை ஒழிப்பதின் கஷ்டங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அவை களில் ஒன்றைச் சொல்லிபாய்விட்டது. மற்றொன்று:— நாம் நம்மில் ஆத்மாவைச்சிறிய பொருளாகவே சாதாரண மாக நினைக்கிறோமன்றி அளவையையுங் காலத்தையுங் கடந்த அது, உலகத்தைப்போன்றதென்றாவது அல்லது அதைவிட அதிகப்பெரியதென்றாவது கொள்கிறோமில் லையே! ஆனால் இக்கஷ்டத்தையும் நிவிர்த்திக்க ஏது கூறி யிருக்கிறீர்கள். தாங்கள் ஆத்மாவின் இரண்டு தன்மை யில் ஒன்று பரமாத்மா, மற்றொன்று ஜீவாத்மா என்றும், வியாபகமான பரமாத்மா எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு அதீதமாயிருக்கிறதென்றும், ஜீவாத்மாவாகிய விஞ்ஞானாத்மா பிரபஞ்சத்தின் ஒருபகுதியை யறியும் சிற் றறிவுடையதென்றும், காட்டியிருக்கிறீர்கள். இந்த வித்தி யாசம் எனது கஷ்டநிவிர்த்திக்கு அமித உதவியாயிருக்கி றது. அதீதமான பரமாத்மா விஞ்ஞானாத்மாவைப்போலத் தன்னை ஏகாந்தப்படுத்தும்பொழுது தனது அறிவின் ஒரு பகுதியைச் சுற்றிலும் பாசத்தை (திரை) போட்டுக்கொள்

கிறதினால் அநுபவத்தில் தன்னை வரையறுத்துக்கொள்கிறது. இந்தவிதமாக அந்த விஷயத்தை யோசிக்கும் பொழுது வேற்றுமையில்லாமலிருந்தபோதிலும், பரமாத்மாவின் அம்சமாகிய 'நான்' என் திறமையற்றவனாகவும் அறியாமையுடையவனாகவுமிருக்கிறேன் என்று தெரிகிறேன். ஆனால் நாம் பரமாத்மாவினின்றும் சுவாதீனமுடையவர்களென்ற கெட்ட நம்பிக்கையைப் போக்குவது அரிய கஷ்டமாயிருக்கிறது.

யாக்ஞ.—இன்னும் இரண்டு விஷயத்தை ஞாபகம் வைப்பாயானால், அதை நீக்குவது அதிக லேசாயிருக்கும் ஒன்று, நீ சொல்லுகிறபாசம், நாம், முன் அறியாத பொருளை அறிகிறதைப்போல இருக்க இருக்க விலகிப்போகிறது. இப்படிப்பாசம் நாளடைவில் அகன்றுபோவதே அடிக்கடி புதிது புதிதாக நாம் பரமாத்மாவின் அம்சமென்பதையும் அவருடன் இடையறாத சம்பந்தமுடையோமென்பதையும் காட்டுகிறது. இடைவிடாமல் சிந்திக்கப்படவேண்டிய மற்றொரு விஷயம்; சுஷுப்தியில் நமக்குத் தெரியாத சுபாதீன நிலைமையை மறைத்துவைத்துத் திரும்பவும் பரமாத்மாவிடத்தில் செலுத்துகின்றதினால் நாம் எப்பொழுதும் அவருடைய சார்பையுடையேம் என்பது.

மைத்.—அதிகமேன்மையான இந்தக் குறிப்புக்கள் எனக்குப் பேருதவியாயிருக்கும்.

ஜாத்தி.—நாம் இன்றைக்குப் போதுமான அளவு பெற்றுவிட்டபடியால் இத்துடன் இப்பொழுது நிறுத்திவிடுவோமா?

மைத்ரி—இன்றைக்குமட்டுமல்ல பலநாளைக்கும்போதுமான விஷயங்களைப்பெற்றிருக்கிறோம் என்றால் இப்பொழுது தூங்கப்போகமுடியாது. நித்திரை செய்வதற்கு முன் முனிவரிடத்தில் கேட்டுள்ள அபூர்வ விஷயங்களைச் சிந்தித்து என்னால் கூடிய அளவு தெளிந்துகொள்ளவேண்டும். நீ இளைப்பாறவேண்டுமானால் இளைப்பாறச்செல்.

காத்தியாயனியும் முனிவரும் திரும்பினார்கள். வழக்கப்படி மைத்ரேயி தியானத்திலமர்ந்தாள். ஆனால் அன்றிரவு வழக்கமில்லாததொன்று நேர்ந்தது. தனது குரு சொல்லிய முறைப்படியே தியானத்திலிருக்க அழியாத அதீத வஸ்துவின் நேர்தரிசனமே அவளுக்குக் கிடைத்து, அவள் ஆத்மா பரமாத்மாவின் ஐக்கியத்தைப் பெற்றதினால் பேரானந்தத்தையுற்றாள். இந்த ஆனந்தத்தில் துவக்கத்திலேயே அதை உலகத்தில் அநுபவிக்கக்கூடிய இன்பங்களிலெல்லாம் விசேஷமானதாக உணர்ந்தாள்.

"தந்தையர் தாயர் உடன்பிறந்தார் தாரமெனும்
பந்தமிகு மக்களொடு பல்கிளையும்—சிந்தைசெயின்
நாடகஞ்செய் பேரவையும் கானிலமேற் சந்தையுங்கூ
டோடுமென் றுள்ளே யுணர்.

ஞானக்கூத் தன்பாதம் நண்ணினேன் அவ்வளவில்
ஊனைக்கூத் தம்புரளைப் ஒழிந்தேனே—வானத
தவராகி இந்திரனாய் பாலாய் அயனாய்
எவராகி யும்பிறந்த யான்."

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே."

"என்று வியந்து துதித்தாள்"

இது முதல் மாறாத உறுதியுடன் அவ்வானந்தத்தை யடைவதிலேயே கவனமாயிருந்தாள் நாளடைவில் பரமாத்மாவின் ஐக்கியத்திற்கும் இறுதி முத்திக்கும் இடையூறாயுள்ள உலகஆசைகளை முற்றிலும் அறத்துறந்தாள். அவள் கணவன் அதிக வயதில் ஆரண்யத்திற்குப் பிரிந்த காலத்திலும், அவள் உலக ஆசையொன்றுமில்லாதவளாய் நாம் மேற்கூறியவாறு உலக நன்மைகளில் பங்கு வேண்டாதவளாய், தான் நித்தியமாயிருப்பதற்குத் தடையாயுள்ளவைகளுக்கு என்னசெய்யவேண்டுமென்பதைப்பற்றி அடிக்கடி தனது பர்த்தாவைச் சொல்லியருளும்படி கேட்டு அழியாத முத்திப்பேற்றுக்கான உபதேசங்களையே பெறுவதில் விருப்புற்றவளானாள்.

முதற்பாகம்,  முற்றிற்று.

உ

# யாக்ஞவல்கியம்.

## இரண்டாம் பாகம்.

### முதலாவது அத்தியாயம்

### குருகுலவாசம்.



யாக்ஞவல்கிய முனிவரை முதற்பாகத்தில் ஒரு குடும்பத் தலைவராகவும் மனைவியர் குருவாகவும் அறிந்துள்ளோம். இப்பொழுது இவர் பொது ஜன குருவாக விளங்கிய விவரத்தையும் ஆராய்வோம். இவர் சிறந்த வேதபோதகராய் விளங்கியவராதலின் இவரிடம் வேதத்தைக் கற்றுக்கொள்வதற்காக எண்ணிறந்த வித்தியார்த்திகள் வந்து காத்திருந்தார்கள்.

அக்கால முறைமை, கல்வி கற்றுத் தேர்ச்சியுற விரும்பும் மாணவர்கள் குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை, கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை, நிலமலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும், உலகிய லறிவோ டுயர்குணமினையவும், அமைந்துள்ள ஆசிரியர்களை அவர்கள் விடுதிகளில், பொழுதொடு சென்று வழிபடல் முனியாது இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப் பருகுவானன்ன ஆர்வத்தராகிச் சித்திரப்பாவையினத்தகவடங்கிச் செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்தும்; வழக்கறிதல், பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல் ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல் அம்மாண்புடையோர் தம்மொடு பயிறல் வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை கடனாகக்கொண்டும், கல்வி கற்றுத் தேறவேண்டுமென்பது. இவரது வேதாந்தத் தோழ

சாகியே ஸ்ரீ ஜனக மகாராஜன் இவருடைய வேதப்பயிற்சியையும் தேர்ச்சியையும் நேரிற்கண்டுணர்ந்தவராதலின், இவரைக் கொண்டு சத்வேதத்தைப் பல மாணவர்கள் கற்றுப் பயனடையும்படியான மார்க்கத்தையும் ஏற்படுத்த வேண்டுமென்ற பெருநோக்குடையவராகவே யிருந்தார். இவ்வெண்ணம் பூர்த்தியாகிறதற் கனுகூலமாக யாக்ஞவல்கியர் வேதபாடசாலை விளங்கியது. ஆகவே இப்பாடசாலையை விருத்தி செய்யும் நோக்கத்துடனும், வாசிக்கும் மாணவர்கள் வாசஸ்தலம் (HOSTEL) ஏற்படுத்திச் சாஸ்திராப்பியாஸிகளுக்குச் சகலவித வசதிகளையும் உண்டு பண்ணிக் கொடுக்கும் விருப்பத்துடனும், ஜனக மகாராஜாவானவர் பெரும் பொருளை நன்கொடையாக அளித்தனர். தற்காலத்திலும் நம்மைப் பலவித ஆபத்தினின்றும் காத்து, நீதியுடன் அரசாட்சி புரிந்துவரும் ஐந்தாவது ஜார்ஜ் மகாராஜா தமது அருமைக் காதலி மேரி மகாராணியுடன் பாதகுலத்தரசர்களின் புராதனத்தலைநகரானதும் தற்பொழுது இந்தியாவுக்கே தலைநகராக விளங்குவதுமான ஹஸ்தினாபுரம் அல்லது டெல்லிமாநகர்க்கு விஜயஞ் செய்து சக்ரவர்த்தி முடி சூடிய காலமாகிய 1911-ம் வருடம் டிஸம்பர் மீ 12-உ இந்திய மக்களின் கல்வி முன்னேற்றத்தைக் கருதி லட்சக் கணக்கான பொருள் நன்கொடை புரிந்து ஆதரித்து வருவதும் பாராட்டப்படுவதன்றோ?

இங்ஙனம் மகாராஜாவின் ஔதாரியத்தாற் கிடைத்த பொருளைக் கொண்டு தம் வீட்டருகில் மாணவர்களுக்காக ஓர் சிறந்த விடுதியொன்று நிருமித்தனர். இவ்விடுதியில் வேதம் பயிலும் மாணவர்கள் யாவரும், உதவிப் போதகர்களின் மேற் பார்வையில் இருந்து வந்தார்கள். பேரா

சிரியசான ஸ்ரீ யாக்ஞவல்கிய முனிவர் அங்கு அவர்களுக் குக் குறிப்பிட்ட காலங்களிற் சென்று போதித்து வருவ துடன், மாணவர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் குறை வின்றிச் செய்யப்பட்டுள்ளனவா வென்றும் கவனித்து வருவார். பாடசாலையில் அந்தண புத்திரர்கள் இளவரசர் கள், வர்த்தகர்கள் வியவசாயிகள் சிற்பிகள் முதலியதொழி லாளிகளின் புத்திரர்கள், ஆகிய யாவரும் ஒரே விதமான சௌகரியத்தையே யடைந்து வந்தார்கள். அவர்கள் யா வருக்கும் ஒரே விதமான உணவு உடை கடமை தண்டனை ஏர்பட்டிருந்தன. தேகாப்பியாசமும் யாவர்க்கும் ஏற்பட் டிருந்தது. சிலர் வேதப்பயிற்சியுடன், யானையும் இரதமும் இவுளியுமுதலா வனைய பிறவு மல்லியல் பிணினடை வுற்று, ஊனுறுபடை பல சிலையொடு பயின்றும் வந்தனர். ஜாதி வித்தியாசங்களின் தொந்தரவு அக்காலத்தில் இல்லை. மாணவர்கள் யாவரும் ஒரே பந்தியி லுண்டும் குடித்தும் ஒருவர்க் கொருவர் சரிசமமாக நடந்தும் வந்தார்கள். அக்காலத்தில் ஒரே வகுப்பினர்க் குள்ளேயே விவாகங்கள் நடப்பதா யிருந்தாலும், ஜாதி விட்டு ஜாதி விவாகமும், விசேஷமாய் அநுலோமர் அதாவது மேல் வகுப்பு ஆடவர் கீழ்வகுப்பு ஸ்திரீகளை மணத்தலும், பிரதிலோமர் அதா வது கீழ் வகுப்பு ஆடவர் மேல்வகுப்பு ஸ்திரீகளை மணம் புரிதலும் ஏற்பட்டிருந்தன.

'கற்றவர்க்கும் நலம் நிறைந்த கன்னியர்க்கும் வண்மைக்கை,
உற்றவர்க்கும் வீரர்என் றுயர்ந்த வர்க்கும் வாழ்வுடைச்
கொற்றவர்க்கும் உண்மையான கோதில் ஞான சரிதராம்
கற்றவர்க்கும் ஒன்று சாதி நன்மை தீமை யில்லையால்."

என்றமைக் கிணங்க, க்ஷத்திரியப் பிரதானிகளில் யயாதி பிராமணப் பெண்ணை மணந்திருப்பதாலும், அரச கன்னிகள் சுயம்வர காலத்தில் எவ்வகுப்பா ராயினும் ஒரு வனை விரும்பி வரிக்கின்ற முறையாலும், ஜாதி வித்தியாசங் கள் பாராட்டப் படாமை விளங்குகின்றது.

ஆகையினால், யாக்ஞ வல்கியருடைய பாடசாலையிற் பயிலும் பலவகை மாணவர்களும் பரஸ்பரம் பிறப்பு, சம் பந்தம் ஆகிய இரண்டினாலும் பந்துத்வ முடையவர்களா யிருந்தமைக் கேற்ப, பொது நோக்கும் ஆதரவும் மிக்க அவ்விடத்தில் பல பந்துத்வத்தை அடிப்படையாகக் கொ ண்டுள்ள அவ்விளைஞர் நேசம், செழித்த பூமியில் விதைத்த விதைபோல் தழைத்தோங்கிற்று.

ஸ்ரீ யாக்ஞ வல்கிய முனிவர் பெயர் யஜுர் வேத சம்பந்தமாக மிகுதியும் பிரபலமுடைய தெனினும், அக் காலத்தில் ஓதிக் கொடுக்கப்பட்ட இருக்கு யஜுர் சாமம் ஆகிய மூன்று வேதங்களிலும் நிற்பணரா யிருந்தமையால் மூன்று வேதங்களையும் முறைப்படி போதிக்கக் கூடியவரா யிருந்தார். தற்காலத்தில் நாம் ஏதாவது ஓர் சிறந்த கல் லூரியில் அந்தப் பாடத்திற்குப் போதகர் (CHAIR) உண் டாவென்று கேட்பவர்க்கு, சரித்திரம் சாஸ்திரம் இலக்கி யம் இவற்றிற்குத் தனித்தனி பீடமுண்டு என்று கூறுவது போல, அப்பாடசாலையிலும் ஆறு வேதாங்கங்கட்கும் தனி த்தனி போதகாசிரியர்கள் (CHAIRS) இருந்தமையால் அவை கள் யாவும் போதிக்கப்பட்டு வந்தன. ஆனால் மற்றவேத வேதாங்கங்களின் உபாக்கியானங்களைப் பார்க்கிலும், யாக் ஞவல்கியரின் சுக்கில யஜுர் வேத உபாக்கியானமே; திர ளான மாணவர்கள் இவரிடம் சேருதற்குக் காரணமாயிரு

த்தனர். மைத்திரேயி யாக்ஞவல்கியர் இவர்கள் மணம் நிறைவேறிப் பல வருடங்களின் பின் ஒருநாட்காலை நூறு மாணவர்களுக்குக் குறையாத மாணவர்களுக்கு முனிவர் பாடஞ் சொல்லிக் கொண்டிருக்கையில் அடுத்த அந்தியாயத்தின் சம்பந்தமுடைய ஒன்று நிகழ்ந்தது. அதைச் சிறிது கவனிப்போம். யாக்ஞவல்கியர் பாடங் கற்பிக்க ஆரம்பித்து அரைமணி யிருக்கும். அப்பொழுது பாடசாலைக் கட்டிட முற்றத்தில் எதிர்பாராத வண்டியொன்றின் சப்தம் கேட்டது. சிறிது நேரத்தில் ஓர் சேவகன் முனிவர் முன்னிலையில் விரைந்து வந்து, சுவாமி! நமஸ்காரம், சேனாதிபதியவர்கள் நான்கு குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஓர் சிறந்த வாலிபருடன் வந்திருக்கின்றார்கள் என்றான். வந்த சேனைத்தலைவர், முனிவரைப் புலிவிபத்திலிருந்து பாதுகாத்த பழைய க்ஷத்திரியத் தோழர்களிருவரில் ஒருவராகிய யக்ஞதத்தரே. இவர் மேற்கண்ட புலிச்சம்பவம் நிகழ்ந்த சில வருஷங்களில் தமது நன்னடக்கையாலும், இராணுவப் பயிற்சி வீரத்தன்மை முதலிய விசேஷகுணங்களாலும் அரசரின் அபிமானத்தை யடைந்து நாளடைவில், இராஜசைந்யத் தளகர்த்தராக உயர்த்தப்பட்டுள்ளார். இவ்வளவு உன்னத இராணுவ அந்தஸ்து வாய்ந்த இவர் இப்பொழுது முனிவர் வீட்டு வாசலில் வர வேண்டிய காரணம் என்னவென்பதை முனிவருக்கும் தத்தருக்கும் நிகழ்ந்த சம்பாஷணையால் அறிவோமாக:—

யக்ஞதத்தர்:—எனது கௌரவ நண்ப! உமது போதனைக்கு விக்கினம் செய்ய நேர்ந்தமைக்குச் சற்று வருந்துகின்றேன். யானும் உமது சிறந்த தொழில் சம்பந்தமாகவே ஈண்டு வந்திருக்கின்றேன்.

யாக்ஞவல்கியர்:—ஆருயிர்த்தோழ! "நவில் தொறும் நூல் நயம் போலும், பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு" என்ற நீதிக்கியைய, பரிசுத்த ஞானமகிமையோடு விளங்குகிற ஒளிவாய்ந்த உம்மைப்போன்ற தோழரைக் காண்பதருமையே. எனது போதனைக்கு உமது வரவால் எவ்வித விக்கினமும் ஏற்படவில்லை. தளகர்த்தருடன் வந்திருக்கும் பேரழகும் சிறப்பும் வாய்ந்த வாலிபனைச் சிறிது கண்ணுற்று, "நண்ப! நும்முடன் வந்திருக்கின்ற இளைஞர் யாவர்?"

யக்ஞதத்தர்:—இவ்விளைஞர் விஷயமாகத் தான் நம்மிடம் வந்திருப்பது. இவ்விளைஞர் பெயர் பிரமகுப்தன் இவர், எனது சிறந்த நண்பரும், அட்டதிக்கும் பிரக்யாதி பெற்ற காசி வர்த்தகருமான இந்திர குப்தரின் புதல்வர். முந்திய வித்வமகா சபைக்காலத்தில் ஜனகமகாராஜன் ஆக்ஞைப்படி யான் காசிக்குப் போயிருந்த காலத்தில் இந்திர குப்தரின் நட்பேற்பட்டது. அது முதல் அடிக்கடி சந்தித்துச் சம்பாஷித்து முள்ளோம். எங்கள் இருவீட்டார்களும் அதிகநேசமாயிருந்து வருகிறார்கள். இப்பொழுது மேற்படி குப்தர், தமதருமைக் குமாரனை இவ்விடம் தம்மிடத்தில் கலைபயிலுமாறு செய்து என்னை மேற்பார்த்துவரும்படி கேட்டுக் கௌரவித்துள்ளார். இக்குமாரர் பதினெட்டு வயதினர். வேதார்த்திக ளறியவேண்டியவற்றையும் அறிந்துள்ளார். ஆனால், நீர் வேதபோதகருள் அதிசிரேஷ்டர் என்னும் புகழ் மொழியே இப்பொழுது இக்குமாரரை நம்மிடம் கலை பயின்று வித்தையைப் பூர்த்தி செய்விக்கும்படியான எண்ணத்தைக் குப்தருக்கு உண்டாக்கி இங்கு இப்பிரமகுப்தரை வரும்படி செய்ததென்க. இவ

ரீவ்விடுதியிலேயே தங்கி யிருந்து நம்மாலும் உதவிப்போதகர்களாலும் போதிக்கப் படிபவைகளைக் கற்றுக்கொள்ள வேண்டுவதுடன், தற்பொழுது மிதிலாபுரி அரசாங்க இராணுவப் பயிற்சிச் சாலையில் பிரதம விற்போதகராய் விளங்கும் நமது கண்ணிய நண்பர் ஸ்ரீவிஷ்ணு மித்திரரிடம் சிறிது நேரம் யுத்தப் பயிற்சியையும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

யாக்ஞவல்கியர்:—தத்த! பிரமகுப்தன் வைசியனுயிருந்த போதிலும், பொதுவாக க்ஷத்திரியர்க்கு மட்டும் பயனுடையதாமென்று சொல்லப்படும் பயிற்சியையும் பெற விரும்புகிறான் என்றறியப் பெரிதும் சந்தோஷப்படுகிறேன். உலகில் பூரண அறிவு என்பதன் பொருள் என்னவெனில், ஒரு வகுப்பார் தனது தொழிலுக் கவசியமான அறிவை மட்டும் அடைதலல்ல, தனது பாதுகாப்பிற்கும் ஆன்மமுத்திக்கும் தேவையான பயிற்சியையும் பெறுதலே. [பக்கத்தில் நின்று கொண்டிருந்த அழகும் திடகாத்திரமும் பொருந்திய வாலிபனைப் பார்த்து விட்டு], ஆகையினால் தான், எனது மைத்துனன் மைத்திரேயா மரபுக்குரிய வேதப்பயிற்சியுடன், நமது விஷ்ணு மித்திரரின் கனிஷ்ட சகோதரரும், துரைத்தன இராணுவ சாலையில் மற்போர் விற்போர் பயிற்றுவிப்பவருமாகிய ஸ்ரீ அக்கினி மித்திரரிடம் மல் யுத்தமும் பயின்று வருகிற விஷயத்தில் மகிழ்ச்சி யுடையவனு யிருக்கிறேன். மைத்திரேயா பெற்றுவருகிற மல்யுத்தப் பயிற்சி உண்மையில் தேவை யில்லாததாயினும் பலமும் சுகமும் பொருந்திய புருடனைச் செய்வதில் எவ்வளவு சாதகமுடைய தென்பதைச் சிறிது கவனிக்கவும்.

யக்ஞதத்தர்:—மைத்திரேயர் எங்கள் க்ஷத்திரியப் பயிற்சியைக் கற்பதில் விருப்பமும், தமது தேக பாதுகாப்பிற் கவனமும் உடையவராயிருக்கிறாரென்பதைக்கேட்கப் பெருமகிழ்வடைகிறேன். நான் மைத்திரேயரை அவருடைய தந்தையார் வீட்டிலும், விஷ்ணு மித்திரர் வீட்டிலுள்ள நேர்த்தியான வாலிபர்கள் கூட்டத்திலும் அடிக்கடி பார்த்திருக்கிறேன். இது நமது இராணுவ வகுப்பின் நற்காலமே. மைத்திரேயரை நோக்கி "மைத்திரேயா! ஒரு வேதாசிரியர் குமாரனும், சிறந்த வேதபோதகரின் மைத்துனனுமான நீ ஓர் யுத்தவீரனுமாவாய் என்று நினைத்தது யார்?

மைத்திரேயா:—(இந்த நயமொழியைக் கேட்டானந்தித்துத் தாழ்மையுடன்), "ஐய! எனக்கு எனது தந்தையார் பார்த்துவரும் தொழிலையே கொண்டு, பிழைக்கப்பிரியம். ஆனால், எனது கண்ணிய குருவாகிய இம்முனிவரது உயிர், தங்களாலும், தனுர் வேதாசிரியர் விஷ்ணு மித்திரராலுமே புலிவிபத்தினின்றும் காத்துத் தப்புவிக்கப்பட்டதென்று யான் இளமையிற் கேட்டுள்ள கதையே; க்ஷத்திரியர்க்கே உரிய பயிற்சி யென்று தப்பாகக் கொள்ளப்பட்டிருப்பதும், உண்மையைக் கவனிக்குமிடத்து, ஒவ்வொருவர் சுகத்திற்கும் பாது காப்புக்கும் அவசியமா யிருப்பதுமான இராணுவப் பயிற்சியைப் பெறும்படியாகத் தூண்டியது. அப்பொழுது தாங்களும் விஷ்ணுமித்திரரும் துணையாக விளங்காத விடத்து என் தந்தையினுடையவும், குரு முனிவருடையவும் கதி என்னவாகி யிருக்கும்?

யக்ஞதத்தர்:—குமார! உனது எண்ணங்களையறியச் சந்தோஷப்படுகிறேன். பிரமகுப்தாவின் விஷயத்திலோ

இராணுவப்பயிற்சி மிகவும் அவசியமானது. அவன் வயது வந்து, தனது தந்தையின் வர்த்தகப்பொருளை நாடுநாடாய், ஊருராய்க்கொண்டுபோகையில், வழிகளில் இருக்கக்கூடிய கொள்ளைக்காரர்களினின்றும் தனது வர்த்தகப்பொருளைப் பாது காத்துக்கொள்வதற்காக, தன்னுடன் வரும் வில்லாளர் பரிவாரத்தை நடத்தவேண்டியிருக்கும். விந்திய பருவதத்திலுள்ள கொள்ளைக்காரர்கள் வீரதீரப்போர்வீரர்கள், இவைகளைத்தேர்ச்சியுற்றுள்ள இராணுவ வீரர்களாலும் எளிதில் வெல்லமுடியாது. பிரமகுப்தன் இதனிமித்தம், ஒரு நல்ல க்ஷத்திரியனாகவும் வைசியனாகவும் விளங்கவேண்டியவன்.

காலை வகுப்புப்பாடம் பூர்த்தியாவதற்குக்காலம் ஆய்விட்டதென்பதைக்காட்ட, வெளியிற் கட்டப்பட்டிருந்த சேகண்டியடிக்கப்பட்டது. மணியின் சத்தம் கேட்கவே சம்பாஷணையும் நின்றுவிட்டது. சிநேகர்கள் சம்பாஷணை நின்றதும் தத்தம் காரியங்களைப் பார்க்கமுற்பட்டனர். பிரமகுப்தன் மாணவனாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டான். யக்ஞதத்தர் அவனுடைய சௌகரியத்திற்குற்ற படுக்கை முதலியவற்றை ஒழுங்கு செய்துவிட்டு, பிரமகுப்தனிடத்தில் "குப்தா நீ உனது பாடசாலைக்காரியங்கள் முடிவடைந்ததும் அடிக்கடி நமது வீட்டுக்கும் வந்து போவாயாக" என்று சொல்லியபின், பாடசாலைப் போதகர்களிடத்தில் வழியனுப்பிக்கொண்டு இரதத்திலேறித் தமது மாளிகைக்குப் புறப்பட்டனர்.



## இரண்டாவது அத்தியாயம்.

### வனவேட்டையும் சரஸ்வதிபாய் மீட்பும்.

சென்ற அத்தியாயத்திற் கூறியசங்கதிகள் நடந்து, வருஷங்கள் ஏழாயின. அக்காலத்திலுள்ள சிறுவர்கள் புருடர்களாகவும், சிறுமிகள் பெண்களாவும் முதிர்ந்துவிட்டார்கள். யாக்ஞவல்கியரின் வேதபாடசாலையிலும், விஷ்ணுமித்திரரின் இராணுவப்பயிற்சிச்சாலையிலும், பயின்ற மாணவர்களிற் பலர் ஆளும் பிரதானிகள் மந்திரிகளாகவும், நியாயாதிபதிகளாகவும், சிப்பாய்களாகவும் உத்தியோகஸ்தர்களாகவும், உலகில் விளங்கிக்கீர்த்தியடைவாராயினர். மைத்திரேயர் தமது தந்தைக்கு வேதபோதனையிலுதவிபுரிந்து வந்ததுடன், அவருடைய முழுக்காரியத்தையும் தாமே நிர்வகித்துப்பார்க்கும் சாமர்த்தியமுடையவராயினர். அப்படியே பிரமகுப்தரும் தாம் பயின்றுவந்த வேதப்பயிற்சியையும் இராணுவப்பயிற்சியையும் முடித்துக்கொண்டு காசியில் தமது தகப்பனார் தொழிலிற் பிரவிர்த்திப்பாராயினர். ஆனால் தமது பாலியப்பருவம் கழிந்த இடமும், பிரியமிடத்து வருத்தமளிக்கும் உண்மை நண்பர்கள் தங்கும் இடமுமாகிய ஜனகாபுரியை அடிக்கடி பார்வையிட்டுத்திரும்புவார். ஜனகாபுரி செல்லுங்காலமெல்லாம், தாம் இளமையில் மிகவும் நெருக்கமாகப்பழகி வந்த தளகர்த்தர் வீட்டின் விருந்ினராகவே உபசரிக்கப்பட்டனர்.

இக்காலத்தில், யக்ஞதத்தர் தமது செல்வப்புதல்வி ஸ்ரீமதி கங்காபாயின் சுயம்வரத்திற்கான காரியங்களைத் தயார்பண்ணிக்கொண்டிருந்தார். விதேக தேசத்திலும் சுற்றிலுமுள்ள நாடக விழுப்புகூட "செப்புங்கால செங்கமலத்தோன் முதல்யாரும்,

எப்பெண்பாலும் கொண்டுவமிப்போ ருவமிக்கும், அப்பெண் தா னே யரசினபோதுங் கயல்வேறோர், ஒப்பெங்கே கொண்டெவ்வ கை நாடியுரை செய்வாம்" என்றபடி விசேஷ அழகாலும் இனிய குணத்தாலும், சாதுரிய புத்தியாலும் ஒப்பற்று விளங்கி யவள் கங்காபாய். இவட்குவயது இருபது. இக்கன்னி தன் நக ரத்திலேயே தனக்குத்தெரிந்துள்ள யௌவன புருடர்களிற் சிற ந்தவரெவரையேனும் மணந்துகொள்ள வேண்டுமென்றாலும் மணந்து கொள்ளலாம். சிறந்த அரசர்களும் இளவரசர்களுமே இவளைக் கைப்பற்றக்கருதிக் காத்திருந்தார்களென்றால், 'பைங்க ழைத்தனுவோன் செங்கைப்பகழியாற் பாவமெய்தி யங்கழற் பட்ட நெய்போலுருகிய' வனையோர் செய்கையைக்கூறவும் வே ண்டுமோ? இவளும் தன்மனதில் இரகசியமாக யாதாமொரு புருடனை விரும்பாதவளாயுமில்லை. ஆனால், சாதாரண முறை ப்படி கலியாணஞ் செய்துகொடுக்க இவளுக்காவது இவள் தந் தைக்காவது மனமில்லை. உயர்குல க்ஷத்திரியரின் பழைய உறு தியான வழக்கப்படி ஒரு பெரிய சுயம்வரக்கொண்டாட்டம் வை த்து, அதில் ஓர் பந்தயம் குறிப்பிட்டு, எவர் தமது வீரத்தன் மையையும் சாமர்த்தியத்தையும் காட்டி ஜெயிக்கிறாரோ அவரு க்கே கங்காபாய் மனைவியாவாரென்று தெரிவிக்கவேண்டுமென் பதே யக்ஞதத்தரின் கருத்து. இதற்கிணங்கியவளாகவே கங் காபாயும் விளங்கினாள். தகப்பனும், மகளும் சம்மதங்காட்டிய இவ்விஷயத்தை, க்ஷத்திரியருக்குரிய வீரமும் யுத்தாப்பியாச முமம் உடைய அவர்கள் சுற்றத்தார்களும் முழுமனதுடன் அங்கீ கரித்தனர்.

புராதன இந்தியாவில் அதிபலர் என்ற பெயர்க்கிலக்கிய மாக விளங்கிய நமது தளகர்த்தரின், தகுதிக்கும் கீர்த்திக்கும

தக்கவாறு வேண்டிய காரியங்கள் மிக்க ஆடம்பரத்துடன் செய்யப்படலாயின. ஆரியரல்லாத அரசர்களில் முக்கியமானவர்களும், உயர்ந்த இராணுவ உத்தியோகஸ்தர்கள், படித்த வித்துவான்கள், பெரியவியாபாரிகள், முதலியவர்களுக்கும் திருமுகம் அனுப்பப்பட்டதுடன், ஜாதி உயர்வு தாழ்வு பாராமல், குறித்த பந்தயத்தை கெலிப்பவர்க்கே கங்காபாய் மணஞ்செய்து கொடுக்கப்படுவாள் என்று நகர்முழுமையும் வள்ளுவரால முரசும் அறைவிக்கப்பட்டது. ஜாதிவித்தியாசம் பெரிதும் கவனிக்கப்பட்ட அக்காலத்திலும் உயர்குல க்ஷத்திரியர்கள்; பகிரங்கமாக நடைபெறுவதான சுயம்வரத்தில், தங்கள் தகுதியையும் மறந்து கீழான ஜாதியாருக்குப்பெண்மக்களைக் கொடுக்க இசைவது எவ்வளவு வியப்பானது! பூர்வீக இந்தியாவில் விசேஷ சுயாதீனமும் ஆழ்ந்த யோசனையும் விருத்திக்குறிப்பும் பொருந்திய வகுப்பினராய க்ஷத்திரியர்கள் தந்தகுதியை மறந்து இத்தகைய சுயம்வரத்தை ஏற்படுத்த எண்ணுவார்களாவென்று யோசிக்கின் அதில் ஏதோ தத்துவார்த்தம் இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. குறிக்கப்படும் பந்தயம் எப்பொழுதும் கடினமானதே. இத்தகைய பந்தயம் தேசத்தில் யுத்தவீரரால் இராணுவப்பயிற்சியில் தேர்ந்தவர்களாலேயே ஜெயிக்கப்படக்கூடியதாயிருக்கும். அப்படி ஜெயிப்பவர்கள் கீழ்க்குலத்தைச் சேர்ந்தவராயிருப்பினும் குணத்தாலும் தொழிலாலும் க்ஷத்திரியர்களேயாதலால் அப்படிப்பட்டவர்களின் மனைவியாராக க்ஷத்திரியப் பெண்கள் மணமுடிக்கப்பெறுவதால் தங்களுக்கு எவ்விதத்திலும் மதிப்புக்குறைவையுண்டுபண்ணுகிறார்களில்லை. இங்ஙனமே சுயம்வரங்கொண்டாடிய பூர்வீக க்ஷத்திரியர்களும் தர்க்கித்திருக்கிறார்கள். தமது இராணுவப்பயிற்சிக்கும் வீரத்திற்கும் குறையாத அறிவினையு

டைய யக்ஞதத்தரும் அவ்விதமே தர்க்கித்திருக்கவேண்டும்.

ஸ்ரீயக்ஞதத்தருக்கு ஜனகாபுரியை அடுத்துக் கங்கைப்பக்கமாக ஓர் சிற்றூர் உண்டு; இதற்கும் கங்கையாற்றுக்கும் பத்து மைல் உண்டு. இவ்வூரில் நாதவிலாசம் என்ற ஓர் பெரிய மாளிகை இவருக்குச் சொந்தமானது. தம்மகள் கங்காபாய்க்குச் சுயம்வரம் ஏற்படுத்த இந்நாட்டுப்புற மாளிகையே சகல விதத்திலும் சௌகரியப்பட்டதென்று கருதினர். ஆகவே சுயம்வர மண்டபம் ஒன்றை விசாலமாகவும் விசித்திரமாகவும் சமைக்கும் வண்ணம், தமது காரியஸ்தரிடம் சொல்ல, அவரும் மண்டபஞ் சமைப்பாரை விளித்து,

'நாணக் கிடங்காடை நகர்நாகத் திடைநன்பொன்
வான்நக்கிடு மாட்சியதோர் மண்டபஞ் செய்திரோன்ன'

அவர்களும்

மீனத்திடை நாள்கிழமை வெள்ளிசயை பக்கம்
கானத்திடை வேங்கையெழக் கண்ணினர்க ளன்றே.

இவ்விதம் சுயம்வரக்கொண்டாட்டத்திற்கு வரக்கூடிய திரளான ஜனங்கள் வீற்றிருப்பதற்காக ஓர் பெரிய வட்டக்கொட்டகை நாட்டு மாளிகையின் சமீபத்திலுள்ள மைதானத்தில் அமைக்கப்பட்டு, எய்யப்படவேண்டிய, மெதுவாகச் சுழன்று கொண்டிருக்கிற மராமயில் ஒரு பத்தியினந்தத்தில் ஓர் உயரிய கம்பத்தில் வைக்கப்பட்டிருந்தது. 'எரிகதிர்ப்பசும்பொன் முகடுவேய்ந்தோங்கி இலங்கிருகரவதமகன்ற, நிரைமணி குயிற்றி மணிவினக்கமைத்த நித்திலவிதான மண்டபம்' அழகிய சித்திரங்களாலும் படங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்ததுடன், நான்கு வாசல்களுக்கும் தக்கவீரர் காவலையும் கொண்டிருந்தது. இக்

கோட்டையைச்சுற்றிலும் விருந்தாளிகள் தங்கிச்செல்வதற்கு வேண்டிய வசதிகளமைந்த பலவகை விடுதிகள் நன்கமைந்து விளங்கின. இவையாவும் ஒருங்கமைந்த அபிப்பிரதேசம் ஓர் பாசறை போற் காணப்பட்டது.

சுயம்வரம் குறிக்கப்பட்ட நாளின் அதிகாலையில் சடங்கு ஆரம்பிக்கப்படுவதாயிருந்தது. ஆனால் தொலை தேசங்களிலிருந்து குறித்த நாளுக்குப் பல நாட்கள் முன்னராகவே வந்துற்ற விருந்தினர்கள், அவரவர்களுக்குத் தனித்தனியாக அமைக்கப் பட்டிருந்த விடுதியில் அமர்ந்தார்கள். ஜனகப்பூர் விருந்தினர்கள் சுயம்வரதினத்துக்கு முதல் நாள் மதியமே புறப்பட்டு வந்தனர். வாலிபர்கள் அவரவர்கள் யோக்கியதைக்கும் தகுதிக்குத்தக்கவாறு சுறுசுறுப்புடன், அந்த இடத்தை முந்திச்சேர்வதில் ஆர்வமுடையவர்களாயிருந்தார்கள்.

பலவிதமான பறவைகளும் காட்டுமிருகங்களும் சஞ்சரிக்கும் அப்பாகத்தில், ஒரு சிறந்த வேட்டையும் நடைபெறுவதாயிருந்தமையால் ஒவ்வொருவரும் அதிசீக்கிரமாய்ப் போய்க்கொண்டிருந்தார்கள். பூர்வீகத்தில் அநேக யாகங்களையும் கெடுத்து ஆரியர் (அறிவுடையவர்) களைக்கொன்று தூக்கிக்கொண்டுபோனவர்களும், இப்பொழுது வில்வேட்டை வாலிபர்களுக்குச் சிறந்த வேடங்களை உதவுகிறவர்களுமாகிய, குன்றுகளில் அலைந்து திரிகிற குறவர்களின் குடிசைகளும் அங்கே இருந்தன. கதை நிகழ்ச்சிக்காலத்திலும் கூட அநேக இடங்களிலுள்ள ஆரிய வீடுகள் இந்த அநாகரிகர்களின் கொள்ளைக்கு உட்பட்டிருந்தன. ஆனால், பெரிய நகரம் ஒன்று பக்கமிருந்ததும், அதிலும் ஜனகன் அதிகப்பலமுள்ள அரசன் என்ற பெயரும், அச்சத்தையும்

பர்ணைக் கலக்கிவிட்டதோடு, ஆரியர் உயிரையும் பொருளையும் அபகரிக்கலாமென்ற எண்ணத்தையும் அறவே ஒழித்தன. அவர்கள் அங்ஙனம் அடங்கி ஒடுங்கியமைக்காக, ஜனகமகாராஜன் தன் நாட்டிலுள்ள எல்லாக்குறவர்களும், மலைகளில் சுயாதீனமாய்த் தங்கிக்கொண்டு, மீன் பிடித்தல், வேட்டையாடுதல் முதலிய தொந்தரவற்ற பழைய தொழில்களை அநுஷ்டித்துவர இடங்கொடுத்திருந்தான். ஆகையால் யக்ஞதத்தர் மாளிகையில் வந்துள்ள வேட்டை விரும்பும் வாலிபர்கள்; சுயம்வரநாளைக்கு முதல் நாள் மாலையில் நடைபெறும் வேட்டையில் குறக் குறும்பர்களை மிருகங்கள் இனத்தில் சேர்த்துக்கொள்ளவில்லை. அக் குறவர்களும்;

"மீன் எறும் பிடிகளோடும் விளங்கும் வெண் மதிநல்லேழும்
கூனல் வான்கோடு நீட்டிக்குத்திடக் குமுறிப்பாயும்
தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக்குறவர் மூந்தி
வானீர் ஆறுபாய்ச்சி விளையும் வளர்ப்பர் மாதோ.
உதியுறுதுருத்தி ஊதும் உலையுறுதீயும் வாயின்
அதிவிட நீறும் நெய்யும் உண்கிலாதானி யுண்ணும்
கொதிநுனை வேற்கண்மாதர் குறத்தியர் நுதலினோடு
மதியினை வைத்தி ஒட்டிக் காண்குவர் குறவர் மன்னோ.
பேணுதற்கரிய சியக்குருளையும் பிடிகள் ஈன்ற
காணுதற்கினிய வேழக் கன்றொடு களிக்குமன்றில்
கோணுதற்குரிய திங்கட் குழவியுங் குறவர் தங்கள்
வாணுதற் கொடிச்சி மகார் மகவொடு வளர்ப்பர் மாதோ.

என்ற செய்யுளில் வர்ணிக்கப்பட்ட வண்ணம்; வியவசாயம் புரிந்தும் மனைவியர் எழில் நலம் பாராட்டியும், மக்களோடளவளாவியும் மகிழ்ந்து வருவாராஞர்.

ஆனல் நாம் பின்னல் அறியப்போகிறபடி, விதியானது வேறுவிதமாய்க் கற்பித்து விட்டது. புதிதாய் வந்துள்ள நகரவாசிகள், சுயம்வரவிசேஷத்திற்காகச் செய்யப்பட்டுள்ள ஒழுங்குகளை ஆச்சரியத்துடன் கவனித்துக்கொண்டும், முகாம் நகரத்தின் பக்கத்திலுள்ள அழகான காட்சிகளைக்கண்டு மகிழ்ந்துகொண்டும், சுயம்வர மண்டபத்தைச் சுற்றிக் கூட்டங்கூட்டமாய் அலைந்துகொண்டிருந்தனர். மேலும்,

தாளிணை கழல்கள் ஆர்ப்பத், தாரிடை அளிகள் ஆர்ப்பத்,
வாள்புடை இலங்கச் செங்கேழ் மணிஅணி வலயமின்னித்
தோள் என உயர்ந்த குன்றின் சூழல்கள் இனிது நோக்கி
வாள் அரிதிரிவதென்னத் திரிந்தனர் மைந்தர் எல்லாம்.

அழகுமிக்க கங்காபாயை விரும்பிவந்துள்ள வாலிபர்களும் அடங்கிய வாலிப விற்போரர்கள் ஒரு குன்றின் சாரலில் பறவைகளை எய்துகொண்டிருந்தார்கள். இதனல், மறுநாட் காலையில் செய்யவேண்டிய கஷ்டமான வேலைக்குத் தங்கள் கைகளைப்பழக்கிக்கொண்டிருப்பவர்கள் போற் காணப்பட்டார்கள். குறிப்பிட்டுள்ள சுயம்வரத்தில் விருப்பமற்ற மைத்திரேயாவும் அந்தக்கூட்டத்திலிருந்தான். அவனும், தன்னிடத்திலுள்ள வில்லால் இரண்டொரு பறவைகளை எய்து வீழ்த்தியுள்ளான். ஆனல் அவனது மனம் அந்த வேட்டையிற் பற்றியிருக்கவில்லை.

அவன் நாளை நடைபெறப்போகிற சுயம்வரத்தைக் கருதாமல் பின்னர் எதாவது ஒருநாளில் வருவதாகத் தோற்றுகிற சுயம்வரத்தைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தான். அது, விஷ்ணுமித்திரரின் புத்திரியும், அழகிலும் பெருமையிலும் விசேஷமானவளுமான சரஸ்வதி பாய்க்கு ஏற்படும் சுயம்வரமே. அது, ஒரு நாள் நடைபெறக்கூடியதென்ற சுயம்வரமேயாயினும், அவனுக்கு அதிக ஆசையை விளைத்துச்சிவந்த முகத்தின் இரத்தத்தையும் ஓட்டிவிட்டது., (முகத்தை வெளுப்படையச்செய்தது.)

இந்தப்பெண்ணின் (கங்காபாய்) சுயம்வரத்தை விரும்புவோர்களில் ஒருவனாகத் தான் நிற்கமுடியாதென்று மைத்திரேயாவுக்குத்தெரியும். இவன், சந்தேகமின்றித் தேர்ந்த விற்போரன் எனினும், தனுர்வேதாசாரியரால் நன்கு கவனித்துப்பயிற்றப்பட்ட வீரர்களுக்கு எட்டுணையும் தான் சமானம் உள்ளவன் அல்லன் எனக்கருதினான். மேலும், ஜாதிவித்தியாசம் யாதொன்றும் இல்லாதபடி சுயம்வரம் பொதுவாக வைக்கப்பட்டிருந்தபோதிலும், ஒரு க்ஷத்திரியப் பெண்ணிற்காக, வில்வீரர்களுடன் போட்டியாகத் தான் நிற்கத் தந்தையாகிய வேதவித்தகர் அபிப்பிராயப்படக்கூடியவரல்லர். தமது நண்பராகிய விஷ்ணுமித்திரர், சாதாரணமாக, தம்முடைய புத்திரியைக் கல்யாணம் செய்து கொடுத்தாலாவது ஒரு வேளை க்ஷத்திரிய மருமகனை ஆக்ஷேபமின்றி எடுத்துக் கொள்ள இசைந்தபோதிலும், அப்பேர்ப்பட்ட போட்டிக்குச் சம்மதிக்கமாட்டாரென்று இவனுக்குத் தெரியும். இவ்வித எண்ணங்கள் மைத்திரேயாவை வருத்தவே, தான் இத்துணை

வருடங்களாகத்தன் இருதய கமலத்தில் பூசித்து வந்த தேவியைச் சிந்தித்தான். இப்படிச் சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது;

"பூவும் பழுத்த செழுந்தீங் கனியும் பொழியமுதம்
மேவும் குடங்கள் இரண்டுடனே இருமீனும் கொண்டு,
சேவுந்து அழகர் திருவெங்கை வாணர் சிலம்பின்மலர்
தூவும் பொழில்எதிர்ப்பட்ட தாலொரு தூமணியே."

என்று சொல்லும்படி, தான் நெடுநாளாகப் பூசித்து வந்த தேவதையே இந்திரஜாலமாகத் தான் விரும்பிய பெண் போல முன்னால் வந்திருப்பதைப் பார்த்தான். பார்த்துத் திகைத்து;

மண்ணே விரைச்சந் தனவரை யோமலர் மாளிகையோ
விண்ணே அலைத்தண் புனலோ பழமலை வெங்கை அன்ன
பெண்ணேடிருக்கும் பொழுதிளஞ் சேலிற் பிறழுநெடும்
கண்ணேடிருக்கும் முகம்போல்வ தாங்கது கண்டிலமே.

என்று மொழிவானாயினன்.

அவளும், 'பழமையும் பயிற்சியும், பண்பும் நண்பும், விழுப்பமும் ஒழுக்கமும், மாட்சியுமுடையார் பற்பல நூறு பிரவர் கண்ணும் மனமும் கவரும் ஒண்ணுதல் மகளிர் சூழத்தாரகை நடுவண் தண்மதிபோல, பலவகை மலர்களும் செறிந்த பொழிலிடம் சென்றிருந்தனள். தனது ஆயத்தார் விளையாட்டு விரும்பினை, தளிர்களைதக்கன கொடுத்தும் என்றும், போதுமேதக்கன கொய்தும் என்றும், மயிலொடு

மாறு இகலுதும் என்றும், குயிலொடு மாறு கூவுதும் என்றும், மருவியாடுதும் சுனைகுடைதும் என்றும், வாசமலர்க் கொடியின் ஊசலாடுதும் என்றும், பரந்து அப்பாலுள்ளார் இப்பாலுள்ளார் கொல்லோவெனவும், இப்பாலுள்ளார் அப்பாலுள்ளார் கொல்லோவெனவும் நினைந்துப் பிரிந்து விடவே, தான் பயின்ற இடமும் தன் ஆயத்தோடு ஒக்குமாதலின், தனித்து நிற்கும் நங்கையாய்; சந்தனமும் சண்பகமும் தேமாவும் திண்பலாவும், ஆசினியும் அசோகமும், மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்த பாதிரியும் பாரைஞாழலும், பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து பெரிய புன்கு புன்னாகமும், முருகொடு முகை சிறந்து வண்டடைந்து தேனார்ந்து, வரிக்குயில்கள் வரிபாடத் தண்தென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் அப்பொழிலது நடுவண், மாணிக்கச் செய்குன்றின்மேல், விசும்புதடைத்துப் பசும்பொன் பூத்து வண்டு துவைப்பத் தண் தேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள். அவள் மைத்திரேயாவைக் கண்டோ காணுமலோ, திடீரெனக் காட்டுப்புஷ்பங்கள் மலர்ந்துள்ள செடிகளைக்கண்ணுற்றதும், புஷ்பங்களைக் கொய்வதனுலாய இன்பம் அவளைத் தோழிகளினின்றும் வெகு தொலைக்குங் கொண்டு போய்விட்டது.

பற்பல நூறாயிரம் கூர்வேல் இளைஞருடன் நளிமாமலைச்சாரல் வேட்டைபோய் விளையாடுகின்ற மைத்திரேயாவும், ஆண்டெழுந்து ஓர் கடமான்பின் ஓடிக்காவல் இளைஞரிற்கையகன்று, வரிசிலையொடு கணையேந்தி வடிவுகொண்ட காமன் போல அவள் நின்ற சோலையிற் புகுந்தான், புகுந்ததும்;

'வளைபயில் கீழ்கடல் நின்றிடமேல்கடல் வான்நுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத் தொல்லோன் கயிலைக்
கிளைவயின் நீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டு தந்த
விளைவையல்லால் வியவேன் நயவேன் தெய்வம் மிக்கனவே'

என்று பாராட்டி, அம்மங்கையினிடத்தில் அன்பாய், பேசவேண்டுமென்ற ஆசையில்லாதவனாயினும், தன்மனதினுறையும் மங்கையின் சமீபத்தில் நெருங்கலானான். திடீரென அந்தப்பெண் துன்பம் மிகுந்த சத்தமிடவே மைத்திரேயா (அவளை நேரே பார்க்க வெட்கி) சற்றுச்சாய்க்கு மேல்பார்வையில், அப்பெண் ஓர் தீரமுள்ள மூர்க்கக் குறும்பனால் பிடிக்கப்பட்டுத் தூரத்திலிருந்த சாலுக்குத் தூக்கிப் போகப்படுவதைப்பார்த்தான். பார்த்ததும், அவனை எய்யலாமென்று நினைத்தும் எய்யாமல், கோபத்தோடும் சத்தமிட்டுக்கொண்டு அவனைத்தொடர்ந்து ஓடினான். அவனை வீழ்த்தி நிறுத்தும் தனது அம்பு, ஒருவேளை தன் கன்னியையே காயப்படுத்திக்கொன்று விடுமோ என்றும் நினைத்தான். ஆகையால் தன்னால் கூடிய விரைவாக ஓடிமறித்துக் கொள்வதே தகுதியென்று நினைத்து அங்ஙனமே செய்தான். அப்பொழுது குறும்பன் அந்த எளிய பெண் தன்னை விட்டுத்தப்பிக்கமுயலாதபடி, அவளைத்தன் தோள்மீது இருக்கச் செய்து, தனது கழுத்தைச்சுற்றி அவள் கையையும் காலையும் பிடித்துக்கொண்டிருந்தான்.

மைத்திரேயா, இதுதான் தனக்குச்சரியான சமயம
என்று தைரியங்கொண்டு அவனுடைய சரீரத்தின் கீழ்ப்பா
கத்தில் அம்பை எய்தனன். அந்த அம்பானது, அவனைப்
பழுத்த பாக்குக்குலையைத் தலையிலேயுடைய பாக்குமரம்
வீழ்ந்ததுபோல வீழ்த்தினது. அவனிடமிருந்த அழகிய
பெண் நெகிழ்ந்த பிடியினின்றும் தப்பித்தன்னுயிரைக் காத்
தவனாகிய மைத்திரேயாவை நோக்கி ஓடினாள். மைத்திரே
யாவும் தன்னை நோக்கி விரைந்து வரும் பெண்ணைக் காப்பா
ற்றத்தன்கைகளை நீட்டின வண்ணமாய் நின்றான். இங்ஙனம்
நீட்டிய கரங்களில் விழுந்த பெண், வேடனால் எய்யப்பட்ட
புறாவைப்போல உடல் நடுங்கினவளாயினும், ஒருவரையொரு
வர்நீண்டநாள் விரும்பியிருந்தவர்களாதலால் அன்பனுடைய
மிருதுவும் இனிமையுமான பரிசம் இவளுக்கு ஒரு மருந்தை
ப்போலுதவிக் குணப்படுத்தச் சீக்கிரத்தில் தெளிவுற்றனள்.
இதற்குள் பறவை எய்பவர்களாகிய மைத்திரேயாவின் தோ
ழர்கள் பெண்ணின் கூச்சலையும் [illegible]வனின் சப்தத்தையும்
கேட்டு முன்னர் ஓடிவரப் பின்னர் பாளையத்திலுள்ள ஜனங்
கள் எல்லாரும் சரஸ்வதிபாயின் பாங்கிமார்கள் கொடுத்த
கூக்குரலைக்கேட்டுத் திடுக்கிட்டு விரைந்து ஓடிவந்தார்கள்.

கூடியகூட்டத்தின் கொஞ்சதூரத்தில் இரத்த வெள்ளத்
தில் புரண்டுகிடந்த குறவனுடன் தான் போராடிய விபரத்தை
மைத்திரேயா எடுத்துரைக்கு முன்னாகவே கூடியதிரளான
ஜனங்கள் பிரத்தியட்சத்தில் விளங்கிய காட்சியினாலேயே ந
டைபெற்றதை உணர்ந்துகொண்டார்கள். ஆயுதசந்நத்தரான
வாலிபர்களில் முன்னேறியவன், குறவனைக்கண்ட க்ஷணமே

தன்வாளால் வீசி எறிந்தான். அந்த மாலைப்பொழுதில் அவன் ஒருவன் மட்டுமிறந்தானென்றிருக்கவேண்டாம். சிநேகமற்ற வர்களென்ற தன்மையைத்தத்தம் செய்கைகளாற் காட்டிக் கொண்டு பக்கத்திலிருந்த குன்றினுச்சியில் காணப்பட்ட அத்துரதிர்ஷ்ட வகுப்பினருள் அநேகர், அந்தக்களத்தில் கூடியிருந்தகோபாவேசமுற்ற க்ஷத்திரியர்களால் எய்யப்ப ட்ட அம்புக்கூட்டங்களுக்கு இரையாயினர். அவ்வாலிப வீர ர்கள் அங்குதங்கிய குறும்பர்கூட்டத்தவரின் குலமில்லாத படி வேரோடழிக்கக்கருதி;

‘மிதித்தனர் கொதித்தனர் விடுத்திலர் படுத்தனர்,
சதைத்தனர் புதைத்தனர் தகர்த்தனர் துகைத்தனர்,
உதைத்தனர் குதித்தனர் உருட்டினர் புரட்டினர்
சிதைத்தனர் செகுத்தனர் செருக்கினர் தருக்கினர்,

சிரத்தினை செரித்தனர் திறப்புயம் இறுத்தனர்
கரத்தினை முரித்தனர் களத்தினைத் திரித்தனர்
பரத்தினைப் பிரித்தனர் உருத்தனர் சிரித்தனர்
புரத்தினை உரித்தனர் பொடித்தனர் படைத்திறம்.

எடுத்தனர் சுழற்றினர் எறிந்தனர் சிலோர்தமைப்
புடைத்தனர் இடித்தனர் புயத்திறற்சிலோர்தமைப்
பிடித்தனர் பிசைந்தனர் பிழிந்தனர் சிலோர்தமை.
அடுத்தலங் கொடித்தலத்தரைத்தனர் சிலோர்தமை.’

காணப்பட்ட இருண்ட உருவங்களின் நீண்ட வரிசை யில் ஒரு கொன்றைத்தவிர மற்றவைகள் காணப்படாமை யால், முதல் தாக்கலிலேயே அம்புகள் சரியான வேலை செய்.

திருக்கின்றனவென்று தெரிகிறது. இவ்வளவும் அந்த வாலிப துஷ்டர்களின் கோபத்திற்குச் சமாதானம் ஆகவில்லை. அவர்களுக்கு முன்னால் தூரத்திலுள்ள மலைச்சாரல்களின் வெள்ளை ஓட்டுகள் போற் காணப்பட்ட சிறுபட்டிகள் கெடுதிக்கும் சதியோசனைக்கும் காரணமானதென்று, அவைகளைக்கொள்ளையடிக்கப் புறப்பட்டார்கள். ஆனால் அப்படிக்கொஞ்சம் அடியெடுத்து வைப்பதற்கு முன், 'நில்லுங்கள், நில்லுங்கள்' என்ற சத்தம் அவர்கள் முற்போக்கைத் தடைசெய்தது. யக்ஞதத்ததைகர்த்தரே பலமான படைவீரர்களுடன் வந்துவிட்டார். அவர் இளம் க்ஷத்திரியர்களைப்பார்த்து, "என் வாலிப நேசர்களே! எனக்காக, அக்கிராமங்களைக் கொள்ளையடிக்காது விலகுங்கள், க்ஷத்திரியர்களாகிய நாம், அவசியமான இடத்திலும் காலத்திலும் தான் இரத்தம் சிந்தாமல் விட்டுவிடக்கூடாது. ஆனால் தூரத்திலுள்ள கிராமங்கள், நமக்கு யாதொரு கெடுதியையும் செய்யவில்லையே. ஒரு கெட்ட துஷ்டன் தனது முட்டாள்தனங்காரணமாகத் தன்னுயிரையே தண்டனையாகக் கொடுத்துவிட்டான். அவன் விஷயத்தில் இரக்கங்காட்டிய வேறு சிலரும் அதே மரணத்தை அடைந்துள்ளார்கள். ஒரு பயபக்தியான விசேஷகாலத்தில் மேலும் அதிக இரத்தப் பெருக்கு வேண்டாம். இதோ என்னுடன் வந்திருக்கும் பலமான வீரர்களைக் காவலாக நியமிக்கிறேன். இவர்கள் இன்று இராத்திரி முழுமைக்கும் நாளைக்கும், கெடுதி விளைக்கின்றவர் சுயம்வர பூமியை அணுகாதபடி பார்த்துக்கொள்வார்கள். இந்த எச்சரிக்கை போதுமானதென்றே நினைக்கிறேன். இறந்ததற்கு (நடந்ததற்கு) இரங்கல் வேண்டாம். ஒரு சுயம்வரம் மற்றொரு சுயம்வரத்தி

ற்கு முந்திவிட்டதானது எனக்கு ஒரு நல்ல சகுனமாகத் தோன்றுகிறது."

இந்த வார்த்தைகளைச்சொல்லும்பொழுது, தளகர்த்தர் மைத்திரேயாவையும், அவனைச்சூழ்ந்துள்ள வாலிபர்களையும் பார்த்துச்சிரித்தார். அவர்களும் அவரைப்பார்த்துத் தங்களுக்குள் சிரித்துக்கொண்டார்கள். தளகர்த்தர் வயதுசென்றவராயிருந்தாலும், அவர் மனம் தங்களைப்போன்ற வாலிபர்களின் எண்ணங்களைக்கொண்டிருக்கிறதென்றுணர்ந்தார்கள். ஒவ்வொருவருடைய மனதும் அந்தரங்கமாய்க் கருதியிருந்ததையே அவர் சரியாய்ச்சொன்னார். சரஸ்வதிபாயே தன் சுயம்வர நாளை எதிர்பார்த்திருந்தவள். முன்னால் நடைபெற்ற சம்பவங்களைப்பார்க்கிலும், அவளுக்கு வேறு ஓர் சுயம்வரமும் தனியே வைக்கவேண்டுமென்று ஒருவரும் நினைக்கவில்லை.

## மூன்றாவது அத்தியாயம்.

### கங்காபாய் சுயம்வரக் கொண்டாட்டம்.

கங்காபாயின் சுயம்வரத்தைக் காணவந்த வாலிபக்கூட்டத்தார் வனவேட்டையாடப் போயகாலத்தில், சரஸ்வதிபாயை ஓர் குறும்பன் தூக்கிப்போக, அவளைக்காதலித்திருந்த மைத்திரேயா, குறும்பனை வீழ்த்தி, மங்கையைக்கைப்பற்றிக் காப்பாற்றிய விசேஷம் முன்னத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இதில் கங்காபாயின் சுயம்வரம் சம்பந்தமான நிகழ்ச்சிகளை விரித்துரைப்பாம். சுயம்வர நாளான வெள்ளிக்கிழமை, கொட்டுமேளங்கள் கோஷிக்க, கொம்புகள் ஊத, இசைக்கருவிகள் இயம்ப, விடிந்தது.

ஒவ்வொரு க்ஷத்திரியன் இருதயமும் மனவெழுச்சியும்
பிரியமும்கொண்ட காட்சியைக்காணலாமென்ற சந்தோஷத்
திற் குதிகொண்டிருந்தது. முதல்நாளிரவில் பாளையத்தில்
அமைதியும் தூக்கமும் கிடையா. முதல்நாள் வராமலிருந்த

பண்ணமை கலினப் பாய்மா பசியபொற் கொடிஞ்சித்
திண்டேர்
கண்ணமுற் சிறுத்துப்பின் கடாம்பொழி களிநல்யானை
மண்ணமை முழுவுத்தின்தோள்வாளைவேல் ஞிழவீரட்டம்
எண்ணிட இடமொன்றின்றி எங்கணும் பரந்தவன்றே

எண்ணத்தொலையாத ஜனங்கள் நகரத்தினின்றும் வந்து
குவிந்து கொண்டேயிருந்தார்கள். விடிந்து ஒருமணியாவ
தற்குள் அந்தப்பெரிய கொட்டகை முழுவதும் கூட்டம் நிரம்
பியது. அந்தக்காட்சி, இதுவரை பார்த்திராத அதிக அலங்
காரமும் சந்தோஷமுமுற்றகாட்சியாயிருந்தது. உத்தளம்
நிரம்பிய அந்தப்பரந்த தரையின் ஓரத்தில் புதிதாக அமைக்
கப்பட்டிருந்த சிம்மாசனத்தில் விதேகதேசமன்னனாகிய
ஜனகர் வீற்றிருக்க, அவரைச்சூழ்ந்து மந்திரி பிரதானிகள்
தத்தம் தகுதிக்கேற்றவாறு வரிசையாகத்தங்கியிருந்தார்கள்.
அவருக்கு எதிரே பரந்த வெளியின் மற்றோர் அந்தத்தில்
சுயம்வரப்போட்டிக்காரார்கள் நின்றுகொள்ளப் பீடமும்,
அதன்பக்கத்தில், பந்தயமாக, ஒருசிறுவிசையால்மெதுவாகச்
சுழன்று கொண்டிருக்கும் மரமயிலும் ஒரு கம்பத்தின் உச்சி
யில்வைக்கப்பட்டிருந்தன. எய்யப்படவேண்டியது, இந்தச்
செயற்கை மரமயிற் பறவையின் கண்களில் ஒன்று. கேலரி
யின் (ஏணிப்பெஞ்சின்) அதியுன்னதபாதிப்பாக முழுமையும்,

தனகர்த்தரின் அழைப்பின்பேரில், வேடிக்கைபார்ப்பவர்களா கவும், போட்டிக்காரர்களாகவும் வந்துள்ள அந்நிய நாட்டா சர்கள் முக்கியஸ்தர்களால் நிரம்பப்பெற்றிருந்தது, ஸ்திரீ கள் தங்கியிருந்த மறுபாகப் பாதியில் தாரகாகணமத்தி யிலுள்ள சந்திரனைப்போல, இன்று பலபுருடர்களாலும் காத லிக்கப்படுபவளாகிய கங்காபாய் பிரகாசித்துக்கொண்டிருந் தாள். சீமான் சீமாட்டிகள் அணிந்திருந்த விசித்திரமான பலவர்ண உடைகளும், முக்கியஸ்தர்களின் மின்னுகின்ற புயங்களும் ஜொலித்துக்கொண்டிருப்பவை; சூரியோதயப்பிர காசத்தை எதிர்ப்பது போலிருந்தன. கொட்டகையின் மற் றொருபாகம் விதேகதேசத்திலும் அதற்கப்பாலுமுள்ள நாடு களிலிருந்தும் வந்துள்ள பலஜாதி ஜனசமூகத்தாரால் ஆகிய திரளான கூட்டத்தாற் பூர்த்தியாயிருந்தது. மண்டபம் இரு பாலாராலும் நிரம்பியதும், சுயம்வரச்சடங்கு ஆரம்பமாகிறது என்பதற்கறிகுறியாக;

> பேரி கொக்கரை சல்லிகை காடிகை பீலி
> சாரி கைத்துடி தண்ணுமை குடமுழாத் தடாரி
> போரியற்படு காகளம் வயிர் முதற்புகலும்
> சீரியத்தொகை இயம்பினர், பாரிடத்திறலோர்.

இராணுவ வாத்தியகோஷத்தின்பின் இனிமையும் மிரு துவுமான வேறாத்ர, உட்ஜாயிரில், அத்ராராஜுல் முதலியவா த்தியங்கள் இசைத்தபின், குருக்கள், இருக்கு, யசுர் சாம வேத சுலோகங்களை உச்சரித்தார்கள். உடனே, ஜனகமகா ராஜாவின் கட்டளைக்கிணங்க, கட்டியக்காரன் பெண்ணின் தந்தையாகிய யக்ஞதத்தருக்காக எழுந்து, 'மனக்கடுங் காதல்

விம்ம, மாலைதாழ்புயங்கள்வாட, எனக்கெனக் கென்றென்றேமாந்திருந்தகாவலரை நோக்கி,'

'சிலையிது சிலீமுகங்கள் இவைகடுந் திரிகை வேகத்
திலேமுகத் தாழலுகின்ற எந்திரத் திகிரிநாப்பண்
நிலையிலா்இலக்கும் அம்மே நெஞ்சுற யாவன்எய்தான்,
கலைவலீர்! அவற்கே இந்தக்கங்கையும் உரியள்என்றான்.
மேலும் கங்காபாயை விளித்து, அரும்பொனே! மணியே!!
இவரில் தனது தோள்வலியால் அரியேறென்ன எழுந்திருந்து அத்
தவரில் புரிநாண் உறஏற்றித்தழல் கால்முனை வெம்சாயகத்தால்
பவரில் செறியநிரைத் துருளும் பல்வாய்த் திகிரிப்பயில் இலக்கைக்
கவரிற் செழுந்தார் புனைந்தவனைக் கைக்கொண்டிடுக கடிதென்றான்.

அதாவது; கங்காபாய்க்கன்னி, இதோ சுழன்றுகொண்டிருக்கிற செயற்கை மயிலின் ஒருகண்ணைக்குறிவைத்து எய்துவிடுபவன், பிரம, க்ஷத்திரிய, வைசிய சூத்திர வகுப்புகளில் எவ்வகுப்பினனாயினும், அவனையே கணவனாகக் கொள்வாள்; என்று கட்டியக்காரன் கட்டுரைத்ததும், கொட்டகை நிசப்தமாயிருந்தது. பந்தயத்தைக்கெலிப்பது அதிகக்கடினமானதாகத்தெரிந்தபடியால், மிக்கதேர்ச்சியுள்ள விற்றொழிலாளரும் திகைத்தனர். இவ்வமயத்தில், அதியுன்னத மேற்றளத்தினின்றும் எழுந்து, மெதுவான கண்ணிய அடிகளால் கீழே இறங்கிய ஓர் அரசனின் புயங்களிலிருந்தும் பிறந்த கணீர் கணீர் என்ற ஓசையானது, ஏற்பட்டிருந்த அமைதியை அதாவது நிசப்தத்தைக்கெடுப்பதாயிற்று. யாவர் கண்

களும் அவனையே நோக்கின. கூட்டத்தார்க்குள், இவன் யாவன்? ஜெயித்துவிடுவானோ? என்ற பேச்சுக்கள் அடக்கமாய் நடந்து கொண்டிருந்தன.

போட்டிக்காரனின் பெயரும் பெருமையும் சொல்லப் படாததாயினும், அவனுடைய தலைக்கிரீடத்தினால் அவனை ஒரு ஆளும் அரசன் என்றறியலாம். சுயம்வர பந்தயம் வைக்கப்பட்டிருக்குமிடத்தில் பெண்ணிற்காவது பார்த்திருப்பவர்களுக்காவது போட்டிக்காரரைப்பற்றி முன்னுரை சொல்வது வழக்கமில்லை, ஆகையினால், கடைசியாக வெற்றியுறுகின்றவன் இன்னானென்று தெரிகிறமட்டும், கட்டியக்காரனாலும் வெளிப்படுத்தப்படாத போட்டிக்காரர் பெயர் தெரியாததாக வேயிருக்கட்டும். முதலில் அம்பெய்த முக்கியஸ்தன் குறி யெய்யத்தவறிவிட்டான், அவனுக்குப்பின்னாலும் எய்யத் தொடங்கிய அநேக இராஜாக்கள் இளவரசர்கள், இராணுவ உத்தியோகஸ்தர்கள், சிப்பாய்கள், விற்றொழில்பயிறாறும் பிராமண க்ஷத்திரிய ஆசிரியர்கள், சூத்திரர்களில் சிலமுக்கியஸ்தர்; யுத்தவீரர்கள் ஆகிய 19 பேர்களும் முதல்வனைப் போலவே வெறறியடையக் கூடாதவீரர்களாயினார்கள். முதலில் முன்வந்த 20 போட்டியாட்களும் தவறிவிடவே, இரும்பவும் கொஞ்சநேரம் சப்தமில்லாமலிருந்தது. அப்பொழுது ஜனகப்பூர் தனுர்வேதாசிரியரான ஸ்ரீ விஷ்ணுமித்திரர்; பந்தயப் போட்டிக்கு எழாமல், தம்பாதத்தருகில் உட்கார்ந்து கொண்டு தம்மைப்பக்கத்தில் நிற்கும்படி வேண்டிய பத்து சிஷ்யர்களை, எப்பொழுது எழுந்து குறி எய்யவேண்டு மென்பதைத் போதித்துத்தேற்றி நடத்துவதற்காக ஏழுந்

தார். ஆவலும் கடமையும் அவரை அங்ஙனம் சம்மதிக்கத் தூண்டின. அவருடைய மாணவர் ஜெயிப்பதாலுண்டாம் கீர்த்தி அவருக்கும் சேருமாதலால் அவர், அம்பெய்வதற்கு முன்னர் ஒவ்வொரு மாணவரும் எழுந்து நின்று ஆசிரியர் சொல்லும் முறையைக்கவனித்தார்கள். அவர் கூறிய முறையாவது:—"கடைசியாக, மற்றொன்றும் தெரியாதபடி பறவையிலேயே உனது கண்களை நாட்டி, பறவை சுழலும் பொழுது அதன் கண்களை உனக்கு நேரில் வருவதற்கான காலத்துடன், அவ்விடத்திற்கு உனது அம்பு செல்வதற்காகும் நேரத்தையும் நிதானித்துக்கொள். கண் உன் முன்னிலையில் வருவதற்கு ஏற்படும் காலத்தையும், எய்யப்படவேண்டிய கண்முன் அம்பு செல்லவேண்டிய போக்கையும் மனதில் யோசித்துச் சமப்படுத்திக்கொள். எந்த நேரத்தில் எய்யவேண்டுமென்று குறிப்பிடுவது நன்றாயிராது; நீயே சரியான காலத்தை நிதானித்துக்கொள்ளவேண்டும்."

ஆசிரியர் எடுத்துரைத்த முறைகளைக்கைக்கொண்டு எய்ய முற்பட்ட ஓர் பிராமணன், ஏழு க்ஷத்திரியன், ஒரு வைசியன் ஆகிய ஒன்பதின்மரும் குறியெய்யத்தவறிவிட்டார்கள். அவர்களில் சிலர் அம்புகள் பறவையின் கண்களில் ஒன்றைத்தொட்டுவிட்டு நழுவியும் விட்டன. பின்னர், கடைசியாக எய்ய விரும்பிய புருடன் எழுந்தனன். அங்ஙனம் எழுந்து நின்றவன், வாசிப்போரே யூகித்தறியக்கூடியபடி பிரமகுப்தன் என்பதும், கங்காபாய் சுயம்வர அறிவிப்பே காசியினின்றும் அவனைப்புறப்படுவரத் தூண்டியதென்பதும், நாம் சொல்லவேண்டியதில்லை.

விதேக நாட்டின் பிரதானபட்டணத்தில் அவனது விற்பயிற்சியையும் அறியாதவரில்லை. பிரமகுப்தன், தனது பள்ளிப்பருவத்திலும், அநேகவித விளையாட்டுகளில் வெற்றியுற்று வெகுமதிகளும் பெற்றிருக்கின்றான். அவன் தனது தகப்பனார் வர்த்தகத்தொழிலைக் கைக்கொண்டது முதல், அவனுடைய செல்வப்பெருக்கமும், செல்வத்துக்கேற்ற கொடைச் சிறப்பும், யாவருக்கும் தெரிந்தவையாதலால், ஜனகாபுரியிலுள்ளவர்கள் யாவராலுமே நன்குமதிக்கப்பட்டனன். அவன் வில்லையேந்தி இலக்குமுன் நின்றபொழுது, அநேகர், நிச்சயமாக இவ்வாலிபனே ஜெயிப்பான் என்ற திடசித்தமுடையவராயினர். யாவருடைய கண்களும் அவனையே பார்த்தவண்ணமாயிருந்தன.

தநுர்வேதாசிரியர்:—"மாணவ; உனது முழுமனதையும் இலக்கின் பேரிலே நிலைப்படுத்தும்வரை, எய்யாதே"

இங்ஙனஞ் சொல்லிக் கொஞ்ச நேரமானதும் மீண்டும், "குப்த! இப்பொழுது எதைக்கவனிக்கக் கூடியதாகிறது?"

குப்தன்:—குரவ! இப்பொழுது, கொட்டகையில் இருப்பவர்கள் ஒருவரும் என்கண்களுக்குத் தெரியவில்லை. பறவையைத்தான் முற்றிலும் பார்த்தவண்ணமாயிருக்கிறேன்.

ஆசிரியர்:—அளவறிந்து சரியான காலத்தில் கவனமாய் எய்துவிடு.

கொஞ்ச நேரம் கழிந்ததும், குப்தன் தன் அம்பை எய்து விட்டான். அது, மயிலின் இடது கண் வழியாய்ச்

சென்று, வலதுகண் வழியாய்த் திரும்பும் வரையும், சுழன்று கொண்டிருக்கிற பறவையின் கண்களில் அங்குள்ளவர்கள் கண்டார்கள். அப்பொழுது அந்தப்பெரிய சதஸினின்றும் உண்டான சந்தோஷக் கூக்குரலும், கோஷிக்கப்பட்ட பேரிகை கொம்பாதி மேளவாத்தியங்களின் கோஷமும், ஆகாய மெல்லாம் நிரம்பின. சப்தங்கள் நிற்பதற்குள்ளாகவே அழகிய கங்காபாய்;

மன்னவனருளால் கன்னியர் அநேகர் மணிக்குடைதாங்கிமுன் செல்லத்
தன் இருமருங்கும் சாமரையிரட்டத்தவளவெண்பணிலமுன் ஆர்ப்ப
அன்னமும் மயிலும் கிளிகளும் பந்தும் அம்மனை கழல்முதல் எவையும்,
பின்னனோர் மருங்கிற் சுமந்துடன் வரவோர் விதானநீழலிடை நடந்தாள்.

விதான நீழலில் வெற்றியுற்று விளங்கும் ஜெயபாலன் கழுத்தில் உயர்ந்த பூமாலை யொன்றைத்தரித்து, அப்பிரமகுப்தரைத்தான் தான் கணவராக வரித்துக்கொண்டனன் என்று புகழ்ந்துரைத்தாள். அப்பொழுது,

'வஞ்சி வழங்கிய மாலை அணிநதோள்
செஞ்சுடரின் முகம் நின்றொளி செய்ய
வெஞ்சுடர் முன் சசியாம் என மிக்கோன்
கஞ்ச முகங்கள் கரிந்தன அன்றே.

கூட்டத்தினர் மகிழ்ச்சிக்குக் கங்குகரையில்லை. வாழ்த்துமொழிகள் பூர்த்தியாவதற்கும், ஜனங்கள் தத்தம் ஜாகை

க்குப் புறப்பட்டுப் போகவும் இதற்குள் மதியத்திற்கு மேல் ஆய்விட்டது.

உடனே, யக்ஞதத்தர் தமது குமாரத்தியின் மணவினைச்சடங்குக்கான காரியங்களைச் செய்யத்தொடங்கினவராய் வள்ளுவனை அழைப்பித்து மணமுரசு அறைதி என, அவனும்;

'ஒட்டண்ட மீதினில் மணமுர சினையெடுத் துயர்த்தி
விட்டவெண்கதி ருமிழ்மணி மறுகிடை மேவி
வட்ட வாருதிச் செல்வமொத் திருந்த மாக்கள்
இட்டமாய் இனிதூழி வாழ்கென எடுத்திசைத்தே

நறைகொள் வாயிலில் மகரதோரணங்களை நடுமின்
நிறையுமாடங்கள் புதுக்குமின், கொடிநிரைத்திடு மின்,
உறையும் வெண்சுதை மதிள்தொறும் கரைத்தொழுக் கிடுமின்
குறைவிலாத பொற்பூரண குடங்கள் வைத்திடுமின்.

பூணு நல்லிழை பூணுமின் குழற்ககிற் புகைமின்
காரெணு இடைக்கம்பொன்மே கலைக்கலன் புனைமின்
பாணியிற் சரிதோளணி பலபரித்திடுமின்
வாணுதற் கண்ணி கடுவரிவிழிக்குமை வரைமின்.

இரவலர்க் கினிதருளொடும் இன்னமு திடுமின்
வரைவிலா தெடுத்தேற்பவர்க் கனிவழங்கிடுமின்
இருமையும் பயன்பெறுமின் என்றினையன விளம்பி
அரசமின் கொளக் குணில் எடுத்தணி முரசறைந்தான்.

நகர ஜனங்கள் யாவரும் தத்தம் வீடுவாசல்களை யலங்கரித்து, தாங்களும் குளித்து நற்பணிகளால் அலங்காரம் பண்ணிக்கொண்டு மன்றல் மனை நோக்கிச் சென்றனர். தாதியர்கள்,

'கனிமகிழ் வெய்தியாங்கட் கலைத்துவண் டிமிரும் பைந்
தார்த்
துளிமதுக் கோதை தன்னைத் துவரிதழ் விரையினுடன்
ஒளிமணி கழீஇயதொப்ப உவப்பொடும் திமிர்ந்து
பொங்கும்
தெளிதிரை சுருட்டுங்கங்கைத் தீம்புனல் ஆட்டினாரே!

'நீராட்டி ஆட்டுபொற் சுண்ணம் திமிர்ந்தள்ளி நெற்றி
யிற் பொட்டிட்டு வெண்,
நீற்றினொடு புண்டரக் கீற்றுக்கும் ஏற்றிடவோர் நித்தி
லச் சுட்டி சாத்தி,
தாராட்டு சூழியக் கொண்டையும் முடித்துத் தலைப்
பணி திருத்தி முத்தின்
தண்ணொளி ததும்பும் குதம்பையொடு காதுக்கோர்
தமனியக் கொப்பு மிட்டு,

'வரிவளைக்குலமும் வள்ளுவர் மங்கல முரசுங்கன்னற்
பொருசிலை மதனின் வின்னாண் புடைப்பொடும் பொங்கி
யார்ப்ப
விரிதிரைப் பரவையீன்ற விளங்கிழையனைய நங்கை
திருமணி இமைக்கும் செம்பொன் மண்டபம் சென்று
சேர்ந்தாள்.

உடனே கங்காபாயின் விவாகச்சடங்குகள் முறைப்படி இனிது நிறைவேறின. யக்ஞதத்தர் பிரமகுப்தரைப் பார்த்து, மருக!

'இன்றையதன்று கேண்மை எமர்நுமர் எழுவர்காறும்
நின்றது கிழமை நீங்கா வச்சிரயாப்பின் ஊழால்,
அன்றியும் அறனுமொன்றே அரசன்யான் வணிகன் நீயே,
என்றிரண்டில்லை கண்டாய், இது நினதில்லம் என்றார்.

பின்னர் யக்ஞதத்தர், தமது நண்பராகிய விஷ்ணுமித்திரருக்கு அந்த நாட்டு மாளிகையையும் அதில் தற்கால சாங்கியமாக நிருமிக்கப்பட்டுள்ள சகல கொட்டகைகளையும் கொடுத்து, அதில் அவர் புத்திரி சரஸ்வதிபாயின் விவாகச்சடங்கை நிறைவேற்றிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டனர்.

விஷ்ணுமித்திரரும் தமது குமாரத்தியைச் சேடியரைக்கொண்டு மஞ்சன நீராட்டி மணப்பெண் அலங்காரம் செய்யும்படி சொல்ல, சரஸ்வதி பாயை அடுத்து,

'நறுங்குழல் கலைத்துத் தூயநெய்விசி நானமும் ஏனைய பொருளும்,
குறுந்தொடிக்கரத்தார், பெய்து நீராட்டிக் குளிர்புனல் துகிளுல் மாற்றிச்
சிறந்த பாவாடை தரித்தொரே பிழைக்குத் திசையெலாம் விலை பெறுதாகி
சிறங்கிளர் தெய்வப்பூந்துகில் தரித்தே நிலைமணித் தவிசின்மீ தமைத்தார்.

அங்கு மணமகளாகிய மைத்திரேயாவும், மிக்க அலங்காரத்துடன், சகோதரியாகிய மைத்திரேயி, அவள் கணவராகிய யாக்ஞவல்கிய முனிவராதியோர் பக்கம் சூழச்சிறந்தாள். அப்பொழுது;

பேரிகை திமிலை குடப்பறை தடாரி பீலியார் திண்டிம முரசோர்
பாரிசப்பதலை இடைக்கை கட்டிய நீள்பணவம் வாரணி தடமொந்தை,
பூரிகை நவுரி காகளம் சின்னம்போர் வயிர் கொம்புகைத் தாளம்
வாரியும் மலைப்பப் பேரிடிமயங்க மண்ணதிர் தாமுழங்கினவால்.

விவாகச் சடங்கியற்றுவோர்;

'பன்மங்கலமும் உடன்வைகிய பண்பினளை
நன்மங்கலப்பூண் துகிலோடு நயந்து சாத்தித்
தன்மங் கலந்த மனத்தோனை அத்தையலோடும்
தொன்மங் கலச் செஞ் சுடர்த்தீவலம் சூழுவித்தார்.

கங்குற்பவளவனமீது கடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள் சிந்திப்பொழியுமாபோல்
அங்கிப்புறத்துத் திருக்காப்பணி அங்கை ஏந்திச்
செங்கட்கரிய குழலாள் பொரி சிந்தினளே!

மாதர்கள் ஆர்த்தனர் வானவர் ஆர்த்தார்
கீதர்கள் ஆர்த்தனர் கேளிரும் ஆர்த்தார்
சூதர்கள் ஆர்த்தனர் துறவரும் ஆர்த்தார்
வேதர்கள் ஆர்த்தனர் வேலை அடங்க.

இந்த இரண்டு மணவிசேஷங்களிலும் ஏற்பட்ட ஆநந்தத்தையும், புதுவாழ்க்கையிற் சென்றுள்ளவர்களின் வாழ்க்கை முறைமையையும் விஸ்தரிக்கவேண்டியதில்லை. ஆனால் நூலறிவுடன் உலகானுபவ அறிவு தக்கவாறு பெற்றிருக்காத சிறுவர்களுக்கு உதவியாக, க்ஷத்திரியப்பெண்ணாகிய சரஸ்வதிபாயைப் பிராமணனாகிய மைத்திரேயர் மணந்ததினால், பிராமணனிற் கீழாகவில்லை யென்பதையும், பிரமகுப்தன் யக்ஞதத்தரின் மகளாகிய கங்காபாயை மணம்புரிந்ததால், க்ஷத்திரியனாகாது முன்னைபோல் வைசியனாகவே விளங்கினான் என்பதையும், இவர்களுக்குப்பிறக்கும் குழந்தைகள் முறையே பிராமண வைசியக்குழந்தைகளென்றே அழைக்கப்படுமென்பதையும் சொல்லிக்காட்ட விரும்புகிறோம். நமது இராஜப்பிரதிநிதி சபையில் கனம் மிஸ்டர் பேட்டல் கொண்டுவந்துள்ள கலப்பு விவாக மசோதா நாட்டில் பல உயர்குல வகுப்பாரால் நிந்திக்கப்படுகின்ற இருபதாம் நூற்றாண்டில், ஜாதி வேற்றுமைகள் பாராட்டப்படுவனபோல் அக்காலத்தில இல்லையாம்.

## நான்காவது அத்தியாயம்.

### யாக்ஞவல்கியர் துறவு.

கடைசியாக நடைபெற்ற சரஸ்வதி மைத்திரேயர் விவாகம் நிறைவேறிய காலத்தில், மைத்திரேயரின் சகோதரியான மைத்திரேயியும், அவளது கணவனும் பரமார்த்த குருவுமான ஸ்ரீயாக்ஞவல்கியரும், இவளது மூத்தமனைவியரும இல்வாழ்க்கை முறைக்கு ஏற்றவருமான காத்தியாயனியும், இவ்வம்மையாரின் மூன்று புதல்வர்களும் மற்றுமுள்ள ரிஷி

கூட்டத்தினரும் வந்து மணமக்களை ஆசீர்வதித்துக் கௌரவப்படுத்தினர். மைத்திரேயியின் தங்கையும், மைத்துனனும் மனமுவந்த சீராத்தையெடுத்து மணத்தை நடத்திவைத்தாரென்று சொல்லுதல் மிகையாம்.

இக்கதை முழுமையும், ஜனகாபுரி யிறைவனாகிய ஸ்ரீ ஜனகமகாராஜனின் வேதாந்தத்தோழரும், வித்வசந்யாசியும், யஜுர்வேதாசிரியரும், பொதுஜன குருவும், இருமனைவியரைக்கொண்டு இம்மைக்கும் மறுமைக்குமுற்ற காரியங்களைத் திருத்தமுற முடித்தவரும் இன்னடிசில் புக்களையும் தாமரைக்கை பூநாறுஞ்செய்யவாய் மக்களைப்பெற்று, 'மக்கள் மெய்தீண்டல், உடற்கின்பம், மற்றவர்; சொற்கேட்டல் இன்பம் செவிக்கு' என்ற பொய்யில் புலவன் பொன்மொழி யனுபவமுற்றவரும், ஆகிய ஸ்ரீ யாக்ஞவல்கியர் சம்பந்தமுடையதாகவே காணப்படுதலின் இந்நூற்கு 'யாக்ஞவல்கியம்' என்ற பெயர் கொடுக்கப்படுவதாயிற்று.

முதற்பாகத்தில் கூறப்பட்டுள்ள விபரப்படி, கல்வி கேள்வியிலும் வேதாந்த விசாரத்திலும் பயிற்சியுற்ற மைத்திரேயி ஜனகமகாராஜன் நடத்திய வித்வத் சம்பாவனை உபந்யாசக்கூட்டத்தில், யாக்ஞவல்கியர் பல அறிஞர்களின் வினாக்களைக்கேட்டு அவரவர்களுக்குத்தகச் சாதுர்யமாய்ப் பதிலளித்த முறையைக்கவனித்தது முதல் 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்ற வாக்குக்கியைய; 'மணந்தால் யாக்ஞவல்கியரை மணக்கவேண்டும்,' என்று தன் மனதில் தீர்மானித்து; காத்தியாயனி, யக்ஞதத்தர் விஷ்ணுமித்திரர் ஆகிய இரு க்ஷத்திரியர்கள் இவர்கள் முயற்சியால், யாக்ஞவல்கியரையே மணந்ததும், மணந்த நாள்முதலே, வித்வமகாசபை

யில் நடைபெற்ற உபந்யாஸ விளக்கத்தில் தனக்கேற்பட்ட சந்தேகங்களைக் கணவரும் ஆசிரியருமான யாக்ஞவல்கியரி டம் தெரிந்து வந்த காலத்திலேயே, உலகவாழ்க்கை நலமொ ன்றே கருதிக்காலங்கழிப்பவளான காத்தியாயனிக்கு ஆன்ம போதத்தை விளக்கிவந்த முறையும் நன்குணரப்படும்.

மைத்திரேயி, வித்வசந்யாசியாகிய யாக்ஞவல்கியரான தன் கணவர், இல்லறந்துறந்து துறவறம்பூண வனத்திற்குப் போகும் வரையிலுங்கூடத் தத்துவோபதேசங்களைக் கேட்ப திலேயே பொழுது போக்குவாளாயினள். புருடரும், மைத்தி ரேயிக்கு ஞானோபதேசம் செய்யுங்கால்

"முடிபொருளுணர்ந்தோர் முதுநீர் நலகில்
கடியப்பட்டன ஐந்துள; அவற்றில்
கள்ளும் பொய்யும் களவும் கொலையும்
தள்ளாதாகும் காமம் தம்பால்,
ஆங்கது கடிந்தோர் அல்லவை கடிந்தோரென
நீங்கினரன்றே நிறைதவ மாக்கள்

நீங்கா ரன்றே நீணில வேந்தே
தாங்கா நரகம் தன்னிடை யுழப்போர்'!
'பிறப்பிற் றுன்பமும் பிறவா இன்பமும்
அறத்தகை முதல்வன் அருளிய வாய்மை' என்றும்

தோன்றுவனவெல்லாம் நிலையற்றன, அவை பிறப்பிற ப்பிறகு உட்பட்டவை, எக்காலத்து இந்தச்சனன மரண நிய மம் நீங்குமோ, அக்காலத்தேதான் ஆநந்தம் காணப்படும் என் றும், பெண்ணே! கவலையால் வாடுகின்ற மனிதர்மேல், இரக்

நம்மை, உலகத்தார் தமது பயனையே கருதி உழைக்கின்றனர், பிறவுயிர் ஓம்புதலைப்பேணிலர், எல்லாருக்கும் தரும உபதேசம் செய்து அத்திய வழியைக்கெடுத்து 'நலவழிப்படுத்து' என்றும் விளக்கிப்போந்தனர்.

யாக்ஞவல்கியர் வனத்திற்குப்போகுமுன், அப்பொழுது வயது வந்தவனும், ஜீவியப்பிரவிர்த்தியுடையவனுமான விவேகாநந்தன் என்னும் மூத்த புத்திரனிடத்தில், குடும்பத்தை ஒப்புவித்தார். மைத்திரேயி சந்தோஷமாகவும், தனது சக்களத்தி அவள் மக்கள்களால நேசிக்கப்பட்டும் வாழ்ந்ததோடு, அவர்கள் பக்குவத்திற்கு ஏற்றவாறு, ஞானாசிரியரிடம் தானடைந்த ஞானத்தைப் போதித்தும் வந்தாள். கணவர் வனத்திற்குப்போனபொழுது, அவர் செய்த பங்கீட்டில் தனக்கு யாதொரு சொத்தும் சுகமும் வேண்டாமென்று மறுத்துவிட்டாள். கலியாணமாயினும் கன்னியாகவே காலங்கழித்துவந்தனள். குழந்தைப் பேறின்மையால், எவ்விதக்கவலையுமற்றவளாய், பரமார்த்த கைங்கரியங்களிலும், ஞானப்பியாசத்திலும் வாழ்நாளைப் பயன்படுத்துவாளானாள். தனது சிறிய்தாயார் ஸ்ரீமதிகன்னி கார்க்கியைப்போலவே ஞானவிளக்காய் என்றும் பிரகாசிப்பவளாயினள்.

ஞான குரவன் நற்றாள் வாழ்க.

---